A

பிஸ்மில்லா ஹிர்றஹ்மானிர் றஹீம்.



இது,

நாயகம் செய்யிதினா அபுல் அப்பாஸ் கிலுறு
அலைஹிஸ்ஸலாம் அவர்கள் காரண
சரித்திரம் அடங்கியது.

# பைளுஸ்ஸலாம் பீஸீரதி
# கிலுறு அலைஹிஸ்ஸலாம்.

இது,

நமது சென்னை இராஜதானியைச்சேர்ந்த
காஞ்சிமாநகரில் வாசஞ்செய்யும் பு. ஹாபிஸ்மவ்லவி
காஜா முஹம்மது ஆலிம் சாயபு அவர்களால்
கோர்வை செய்யப்பட்டு,

அபுல்பஜல் பு. முஹியித்தின் சாஹேப் முயற்சியால்

சென்னை:
தருமச்சீலன் ஆபீஸில்.
பதிப்பிக்கப்பட்டது.

1920

பிஸ்மில்லா ஹிர்றஹ்மானிர் றஹீம்.






# பைஹுஸ்ஸலாம், பிஸீரத், கிழுரு அலைஹிஸ்ஸலாம்.

## முகவுரை.

அல்லாஹு தஆலாவைப்புகழ்ந்து அவனுடைய றசூலாகிய நமது நாயகம் சாலாமே றசூல் முகம்மது சல்லல்லாகு அலைஹிவசல்லம் அவர்கள்பேரிலும், அவர்களின் கிளையினர் தோழர்மார்கள்பேரிலும், சலவாத்தும், சலாமும் சொல்லியபின்னர், அல்லாகுத ஆலாவுடைய பொருத்தத்தளவில் ஆதரவுவைத்தவனாகிய கந்தசிமாநகரில் வாசம் செய்யும் காஜா முகம்மது சல்மைஹு லெப்பை என்பவன் சொல்லுவ தாவது என்னவெனில், எனது அகத்தில் வெகுகாலமாய் நாயகம் அபுல் அப்பாஸ் கிழுரு அலைஹிஸ்ஸலாம் அவர்களின் கடைபாகத்தில் அழகான ரிஸாலா வொன்று அறபி பார்ஸி ஹிந்துஸ்தானி இப்பா ஷைகளை அறியாதவர்களுக்கு தமிழ்பாஷையில் எளிதாகும் வண்ண மாகக் கோர்வைசெய்ய வேண்டுமென்று நினைத்தபோது நான் அதற்குத் தகுதியில்லாதவனாயிருக்கிற ஹாலில் அல்லாகுதஆலா வின் வரிசையினாலும் கொடையினாலும் அவ்வாறு கோர்வை செய்ய இன்பேரில்அவன் எனக்கு நல்லுதவி அருள்புரிந்தான். பிறகு நான் பாவான்களான உலமாக்களின் கிதாபுகளைப் பார்வையிட்டேன். அவையாவன: தப்ஸீர் ஜலாலயன், கமாலயன் மதாரிக்கு தன்ஸில் மதாரிக்கு காஸின் ருகுல்பயான் ஸஹீகுல்புகாரி,ஸஹீகுல்முஸ்லீம் கஸ சுல் அன்பியா, தஸ்கிறதுல் அவ்லியா, அற்றவாமே அஸ்கியா, குலா ஸாதவாரிகே அன்பியா, நக்துன்நசர் என்பவைகளாம். இவைகளில் நின்றும் மற்றும் கிதாபுகளில் நின்றும் சுருக்கமாய் எடுத்துக்கோர் வை செய்திருக்கிறேன். இது அல்லாகு தஆலாவின் புகழிலும் கோர்வையில்மெத்த அழகான நிரப்பத்தின் பேரில் வந்தது. இதற்கு

[illegible] கிலுரு அலைகிஸ்ஸலாம் என்று பேர்வைத்தேன். [illegible], இதில் உதயமாகிப் பார்கரும்பேர்களில் நின்று ஆதரவுவைக்கப்பட்டதாகிறது. இதில் ஏதேனும் பிழையிருந்தால் பெரியோர் சங்கை கொண்டுதிருத்திச் சுத்தப்படுத்திக் கொள்வாராக. பின்னர் நான் அல்லாசுபுகானகுத்தாலாவிலிடத்தில் ரசூல்மார்களின் கைரான நபியைக்கொண்டு வசிலாதேடினவனுக அதின் பிரயோஜனத்தை பெரியோர் சிறியோர் அனைவர்களுக்கிடையில் அடையவளைத்தலாக்குதலையும், இன்னுமிதை அவனுடைய திருமுகத்துக்கே கலப்பறுதலாக்கிவைத்து நயீமென்னும் சுவனலோகத்தைக் கொண்டு ஜயம்பெறுவதற்கு வசிலா வாக்குவதையும் அல்லாகுத்ஆலாவிடத்தில் மிகவும் கெஞ்சிக் கேட்கிறேன். அவனுகிறவன் கொடை கொடுப்பவர்களில் மெத்தக் கொடையாளன். கிருபையாளர்களில் மெத்தவும் தயாளமானவன். அவன் முகம்மத்சல்லல்லாகு அலைகிவசல்லம் அவர்களின் மீதிலும் அவர்களினமுறையைச் சார்ந்தவர்களின் மீதிலும் சலவாத்தும் சலாமும் சொல்வானுகவும்.

1-வது பஸல் (நாயகம் கிலுரு அலைஹிஸ்ஸலாம் அவர்களின் வம்மிசப்பதியில் பேசும் பிரிவு.)

நாயகம் கிலுரு அலைகிஸ்ஸலாம் அவர்களின் குன்யத்தென்னும் ஸைக்கினைப்பேர் அபுல் அப்பாஸ்; பட்டப்பெயர் கிலுரு; அசல் பேர் பல்யா; அவர்கள் நூகு அலைகிஸ்ஸலாம் அவர்களினின்று ஆறுவது தலைமுறையில்வந்த மல்கான்உடைய குமாரர். அவர்கள் காலியுடைய குமாரர். அவர்கள் ஷாலிக்உடைய குமாரர்; அவர்கள் ஆமிர் உடைய குமாரர்; அவர்கள் அறுபக்ஷத் உடையகுமாரர்; அவர்கள் நூகு அலைகிஸ்ஸலாமுடைய குமாரராயிருக்கும். ரலியல்லாகு அன்கு.

2-வது பஸல் (நாயகம் கிலுரு அலைகிஸ்ஸலாம் அவர்களின் பிறந்தவரலாற்றைப்பற்றிப் பேசும் பிரிவு.)

இஸ்திலாவுல் அக்யாத் என்ற [illegible] வருகிறது: சுல்தான் சிக்கந்தர் துல்கர்னைன் உடைய தகப்பனுர் வான சாஸ்திரமென்னும் நுஜூமுடைய இல்மில் மிக அறிந்தவராயிருந்தனர். அவர் எப்பொழுதும் வானத்தின் நக்ஷத்திரங்களைப் பார்த்துக் கொண்டேயிருப்பார். அப்படியிருக்கையில் ஒருபோது அவர் தம் மனைவிக்குச் சொன்னதாவது: நான் இன்றிரவு ஒரு சாஅத்து நேரத்திற்கு நித்திரை கொள்ளுகிறேன். ஆனதுபற்றி நீவானத்தைப் பார்த்தவளாக இருந்து இப்போது இன்ன நக்ஷத்திரம் இன்ன விடத்தில் உதயமாகக்கண்டால் என்னை எழுப்பிவிடு. அப்

போது நாம் இல்லறமார்க்கத்தில் சந்தோஷ முற்றால் உன்னிடத்தில் கருப்பம் தரித்து ஒரு ஆண்குழந்தை பிறந்து அது கியாம நாள் பரியந்தம் நீண்ட ஹயாத்துடையதாயிருக்குமென்று சொல்லிவிட்டு நித்திரைகொண்டார். அவர்சொல்லிய சமாசாரம்யாவற்றையும் அவர் மனைவியின் தங்கை கேட்டுக்கொண்டு அவள் வானத்தைப் பார்த்தவளாக இருந்து அந்நக்ஷத்திரம் உதயமாகியபோது அவள் தனது புருடரை எழுப்பி சுல்தான் சிக்கந்தர் உடைய தகப்பனார் சொல்லிய செய்திகளை அவருக்குச் சொல்லி அவர்களிருவரும் அவ்வாறே நடந்தார்கள். அதில் கிழுரு அலைகிஸ்ஸலாம் அமல் தரித்தார்கள். அதன் பிறகு சிக்கந்தருடைய தகப்பனார் சிறிது நேரத்திற்கெல்லாம் தூக்கத்தைவிட்டு விழித்துப்பார்க்கையில் அந்நக்ஷத்திரம் உதயமாகி வேறு மண்டலத்தில் போய் அடங்கிவிட்டது. பின்பு அவர் மனம் சஞ்சலமுற்றவராகத் தம் மனைவியின் பேரில் கோபமாய் அவளை நோக்கி, "ஏன் நீ என்னை எழுப்ப வில்லை?" என்று கேட்க, அவள், "எனக்கு வெட்கமாயிருந்தது; ஆனதினால் நான் எழுப்பக் கூடவில்லை" என்று சொல்லியபோது, அவர், "நான் இந்நக்ஷத்திரத்தைத் தான் நாற்பது வருடகாலமாக வழிபார்த்திருந்தேன்; அல்லாது தஆலாவின்பேரில் சத்தியமாக நீ என்னுடைய வாழ்நாளை அவலமாக்கிவிட்டாய்" என்று சொல்லி விட்டு மறுபடியும் அவர், "இப்பொழுது வேறொரு நக்ஷத்திரம் உதயமாகின்றது; அதிலாவது நாம் முன்சொன்னபடி செய்யவேண்டும்; அதனால் ஆண்குழந்தை ஹமல்தரிக்கும். அதன் அதிகாரம் எழுவானந்தொடுத்து படுவானம்வரையில் செல்லு"மென்று சொன்னவராய் அந்நக்ஷத்திரம் உதயமாகியபோது அவ்வாறே செய்தார். அதில் சுல்தான் சிக்கந்தர் துல்கர்னைன் ஹமல்தரித்தனர். அதேசமயத்தில் தான் கிழுரு அலைகிஸ்ஸலாமும் கருப்பத்தில் தரித்தார்கள். மேற்படி சிக்கந்தர் துல்கர்னைன் மஷ்ரிக்குக்கும் மக்ரிபுக்கும் ராஜாவாகி விடவும், கிழுரு அலைகிஸ்ஸலாம் அவர்கள் அவருக்கு மந்திரியாக விருந்து மாவுல்ஹயாத்தென்னும் என்றென்றும் ஜீவித்திருக்கிற சிறப்புற்ற தண்ணீரைக் குடித்து சதாகாலமும் ஹயாத்தாகவேயிருந்து வருகிறார்கள். அவ்விருவர்களின் தாயாரும் ஒன்றித்த சகோதரிகளேயாவர். ரலியல்லாகு அன்கும்.

### 3-வது பஸல் (நாயகம் கிழுரு அலைகிஸ்ஸலாம் அவர்கள் தற்புத்தியானதில் பேசும் பிரிவு.)

இமாம் சஃறானி றகுமதுல்லா உடைய கிதாபில்வருகிறது: அதென்னவெனில்: கிழுரு அலைகிஸ்ஸலாமுடைய தகப்பனார் அர

அரசராயிருந்தார். அவர்களின் தாயாரின் பேர் அல்ஹா. அவர்கள் கிலுரு அலைகிஸ்ஸலாமைப்பெற்று ஒரு மலைப்பொதும்பில் விட்டு விட்டுப்போய் விட்டார்கள். அப்படியிருக்கையில் ஏதோ ஒரு சிறிய நாட்டிலுள்ள ஒரு மனிதனுடைய ஆடானது பிரதிதினமும் அம்மலையின் பொதும்பில்வந்து அவர்களுக்குப் பால் ஊட்டிவிட்டுப் போகிறதாயிருந்தது. இது செய்தி அந்த ஆட்டுக்காரனுக்குத் தெரியவரவும் அவன் கிலுரு அலைகிஸ்ஸலாம் அவர்களைத் தன்னுடைய வீட்டிற்கு எடுத்துக்கொண்டுபோய் வளர்த்துக்கொண்டிருந்தான். அவர்கள் வாலிபப்பிராயத்தை எய்தியபோது தங்கள் தகப்பனாராகிய அரசருக்கு இபுராஹீம் அலைஹிஸ்ஸலாம் சீது அலைகிஸ்ஸலாம் இருவர்களின் வேதங்களை எழுதுவதற்காகவேண்டி எழுதுகிறவர் தேவையாயிருந்தது. அதினால் அவருடைய சபைக்கு பாரவான்களான உலமாக்களெல்லாம் அங்குவந்து. கூடி ஒவ்வொருவரும் எழுதிக்காட்டவும் அவர்கள் அனைவர்களுடைய எழுத்தைவிட கிலுரு அலைகிஸ்ஸலாமுடைய எழுத்து மிகவும் அழகாகத்தெரியவும் அரசன் கிலுரு அலைகிஸ்ஸலாம் அவர்களை முன்னிலையாக ஏற்படுத்திவிட்டு நாயகம் அவர்களின் வம்மிசத்தைக் குறித்துக்கேட்டுவிட்டு கிலுரு அலைஹிஸ்ஸலாமைத் தன்னுடைய மகனென்று அறிந்தார். பிறகு அரசர் நாயகம் அவர்களைத் தமது ராஜாங்கத்திற்கு காரியகர்த்தாக ஏற்படுத்த நாடியபோது அவர்கள் அதனை கபூல்செய்யாமல் அவரைவிட்டு ஒளித்தோடினவராக சமுத்திரத்திலுள்ள தீவுக்கு யாத்திரை போய்விட்டார்கள். ரலியல்லாகு அன்கு.

## 4-வது பசல் (கிலுருவென்று பேர்கிடைத்த காரணத்தில் பேசும் பிரிவு.)

சஹீபுகாரி, சஹீஹேமுஸ்லிம், திருமதி, முஸ்னத்இமாம் அஹ்மத்' இந்த கிதாபுகளில் அபூஹுறைரா ரலியல்லாகு அன்குவைத் தொட்டும் முவுஜிமே தபுறாணியில் இபுனு அப்பாஸ் ரலியல்லாகு அன்குவைத் தொட்டும் ரிவாயத்து வந்திருக்கிறது. நாயகம் ரசூல் சல்லல்லாகு அலைஹிவசல்லம் திருவுளமானார்கள். கிலுரு அலைகிஸ்ஸலாம் அவர்கள் புற்பூண்டு முதலியவைகள் முளைக்காத அல்லது பட்டுப்போன புற்களில் உட்கார்ந்தால் அக்ஷணமே அந்த பூமியும் புற்களும் பச்சையைக்கொண்டு பசுமையாகி விடுகின்றவைகளாயிருந்தன. இதற்காகத்தான் அவர்களுக்கு கிலுரு என்றுபேர் கொடுக்கப்பட்டதென்று சொன்னார்கள். இன்னும் காஸின் மஆலிமே தன்ஜீல் முதலிய தகிரிபுகளில் வருகிறது. கிலுரு அலைகிஸ்ஸலாம்

அவர்கள் எந்த இடத்தில் தொழுதாலும் அவ்விடத்தில் அவர்களைச் சுற்றி புல்பூண்டுகள் பசுமையாகிவிடுகிறவைகளாயிருந்தன. இதற் காகததான் அவர்களுக்கு கிலுரு என்று பெயர் வைக்கப்பட்டதென் று. இன்னும் இமாம்பக்ருத்தின் ராஸி தங்கள்தப்சிரில் எழுதியிருக் கிறார்கள்: கிலுரு அலைகிஸ்ஸலாம் அவர்கள் ஓரிடத்தில் நிற்கிறதில்லை, அவ்விடம் பச்சையைக் கொண்டு செழுமையானுலொழிய என்று. இன்னும் சில கிதாபுகளில் இதைப்போல் ரிவாயத்து செய்யப்பட்டி ருக்கிறது: ஒருபோது கிலுரு அலைகிஸ்ஸலாம் அவர்கள் புற்பூண்டு இல்லாதகாட்டு வனாந்தரத்தில் போகிறபோது அவர்களின் புறம்பாக வே புற்பூண்டு தளிர்த்துக்கொண்டே போயின; அதனால் அவர்க ளுக்கு கிலுரு என்று பெயர் சொல்லப்படுகிறது என்று. ரலியல்லாகு அன்கு.

5-வதுபாஸல் (கிலுரு அலைகிஸ்ஸலாமுடைய நபிபட்டத்தில் பேசும் பிரிவு.)

இமாம் முல்லாஅலி அல்ஹரவி என்கிறவர்கள் எழுதியிருக்கி றார்கள்: கிலுரு அலைகிஸ்ஸலாம் அவர்கள் நபியாயிருக்குமென்றவிஷ யத்தில் ஜும்ஹூரான உலமாக்கள் ஒற்றுமையாகியிருப்பதை நவ விரகுமகுல்லாவும் மூர்க்கமாக்கி வைத்தார்கள். இதற்கு ஆதாரமாக அப்துபுனு அமீது என்பவர்கள் ரபீவுபுனி அனஸ் ரலியல்லாகு அன் குவைத்தொட்டும் ரிவாயத்து செய்து சொல்கிற தென்னவெனில்: மூஸா அலைகிஸ்ஸலாம் அவர்கள் கிலுரு அலைகிஸ்ஸலாமை சந்திக்கப் போனபோது அவர்கள் கிலுரு அலைகிஸ்ஸலாமை நோக்கி "அஸ்ஸ லாமு அலைக்கயாகிலரு" என்றுசலாம் சொல்லவும் அதற்குமறுமொ ழி கிலுரு அலைகிஸ்ஸலாம் அவர்கள் "வஅலைக்கஸ்ஸலாம் யா மூஸா" வென்றுபதில் அளிக்கவும் மூஸா அலைகிஸ்ஸலாம் அவர்கள் "ஆய்கிலு ரே! நீர் எனதின்பேரை எவ்வாறு அறிந்தீர்"? என்றுகேட்க அதற்கு அவர்கள் "ஆய்மூஸாவே! யார் என்னை உமக்கு கிலுரு என்று அறி வித்துக்கொடுத்தானே அந்த நாயன்தான் எனக்கும் உம்மை மூஸா வென்று அறிவித்துத் தந்தான்" என்று சொன்னார்கள் என்று. இந்த ரிவாயத்தும் கிலுரு அலைகிஸ்ஸலாம் நபி என்பதின்பேரில் துலாம்ப ரமாக அறிவிக்கிறதென்று சொல்லுகிறார்கள். ஆனால் சிலர் அவர்கள் வொலியாயிருக்குமென்று சொன்னதை உலமாக்கள் ரத்துசெய்துவி ட்டார்கள். இன்னும் ஷைக் அப்துல் ஹக் திஹ்லவி ரகுமகுல்லா அவ ர்கள் மிஷ்காத்துல் மசாபீஹ் என்ற கிதாபின் ஷராஹாகிய அஷி அத்துலமஆதில் கிலுரு அலைகிஸ்ஸலாம் அவர்கள் நபி என்பது

தான் சஹீஹான சொல்லாயிருக்குமென்று தீர்மானித்து இருக்கிறார்கள். இன்னும் மிகுந்த உலமாக்கள் அவர்கள் நபி என்பதற்கு ஆதாரமாக இந்த ஆயத்தை தலீலாக எடுத்துக்காட்டுகிறார்கள். அவையாவன: "வமாப அல்துகு அன் அம்ரி" யஅனீ கிலுறு அலைகிஸ்ஸலாம் அவர்கள் மூசா அலைகிஸ்சலாமை நோக்கி "ஆய் மூசாவே! நான் கப்பலை ஓட்டை ஆக்கினதும் பையனைக் கொன்றதும் விழுந்து போகிறசுவரை நேராய் நிமிர்த்தியதும் ஆகிய இவை மூன்று காரியத்தையும் எனது யோசனையாய் நான் செய்துமுடிக்கவில்லை என்று சொன்னார்கள். இதன் சிறிது விவரங்கள் இன்ஷா அல்லாகுதஆலா பின்னால் எழுதிக்காட்டப்படும். ஆனதால் இந்த ஆயத்தின் மூலமாய் அவர்களுக்கு அல்லாகு தஆலாவுடைய உத்திரவு உண்டாகும் அல்லது மலக்கு மூலமாக வகியுவருமென்று மேற்படி ஆயத்து மூலமாக அறியப்படுகிறது என்று. இன்னும் இஸ்மாயீல் இபுனு அபீஸியாத் என்பவரும் முகம்மதுபுனிஇஸ்காகும் இன்னும் சில கிதாபு உடையவர்களும் சொல்லுகிறார்கள்: கிலுறு அலைகிஸ்ஸலாம் அவர்கள் முருசலான நபியாயிருக்கும் அவர்களை வேறுகௌமுகள் பேரில் அனுப்பிவைக்கப்பட்டது. அந்த கௌமுகள் அவர்களுக்கு வழிபட்டு நடந்தார்கள் என்று சொன்னசொல்லை அபுல்ஹசன் கிருகானி இமாம் இபுனுஜௌஸி ரகிமகுல்லா இருவர்களும் பல வந்தப்படுத்தி யிருக்கிறார்கள்.

6-வது பஸல். (நாயகம் கிலுரு அலைகிஸ்ஸலாம் அவர்கள் மாவுல் ஹயாத் தண்ணீரைப் பெற்றுக் கொண்டதில் பேசும் பிரிவு)

ரிவாயத்இபுனு அஸாகிர் என்பவர்கள் அபூஜ அபர்றலியல்லாகு அன்குவைத்தொட்டும் ரிவாயத்து செய்திருக்கிறார்கள்: என்னவெனில், சுல்தான் சிக்கந்தர் துல்கர்னைன் அவர்கள் அல்லாகு தஆலாவுடையசாலிஹான அடியாராகியிருந்தனர். அவர்கள் அதிகாரமோ எழுவானம் தொடுத்து படுவானம்வரையில் நடைபெற்று வந்ததும் தவிர அவர்களுக்கு ஒரு மலக்கு அதிக மஹப்பத்தாயிருந்தார். அவருக்கு ரப்பாயீல் என்றுபெயர் சொல்லப்படும். அவர் எப்பொழுதும் சிக்கந்தர் துல்கர்னைன் இடம் வந்துபோய்க்கொண்டே யிருப்பார். ஒருதினம் இருவரும் பேசிக்கொண்டிருக்கிறபோது சிக்கந்தர் துல்கர்னைன் அவர்கள் அம்மலக்கிடத்தில், "நீங்கள் வானத்தில் எவ்வாறு அல்லாகு தஆலாவை இபாதத்து செய்துவருகிறீர்கள்." என்று கேட்க, அவர் சிக்கந்தரை நோக்கிச் சொன்னதாவது: "நீங்கள் செய்யும் இபாதத்தானது எங்களுடைய இபாதத்தளவில் சேர்த்துப்பார்த்

தால் மிகவும் கொஞ்சமேயாகும்; ஏனெனில் வானலோகத்தின் மலக்
குகளில் சிலர் கியாம் என்னும் நிலையிலேயே நிற்கிறார்கள்; ஒருபோ
தும் அவர்கள் அதைவிட்டுத் தலையைக்கவிழ்த்துகிறார்களில்லை; இன்
னும் சிலர் சஜதாவிலேயே தரித்திருக்கிறார்கள்; அவர்கள் அதைவிட்
டுத் தலையை உயர்த்துகிறார்களில்லை; இன்னும் சிலர்ருகூவிலேயே
நிற்கிறார்கள்; அதைவிட்டு நிலைக்குவருகிறார்களில்லை; இன்னும் அவர்
கள் அனைவரும் சொல்லுகிறதாவது: (சுப்ஹானக மா அபத்னாக ஹக்கஇபா
ததிக்) ‘ஆ! எங்கள் நாயனே! நாங்கள் உன்னைவணக்கத்தின் ஹக்
குபிரகாரம் வணங்கவில்லை’ என்று சொல்லுகிறார்கள்” என்று அம்ம
லக்கு சொன்னபோது சிக்கந்தர் துல்கர்னைன் அழுதவராய்ச் சொன்
னார்: “ஆய்ராபுராயீ லென்னும் மலக்கே! எனது வாழ்நாள் நீளமாயி
ருக்கும்பக்ஷத்தில் அல்லாகுதஆலாவை எப்படிவணங்கவேண்டுமோ
அப்படி வணங்குவேன்” என்றுசொல்லவும் அம்மலக்கு சொன்னார்:
“அல்லாகுதஆலா பூமியில் மாவுல்ஹயாத்தென்னும் ஓர் சுனையை
சிருஷ்டித்திருக்கிறான்; அதில் நின்றும் எவனொருவன் ஒரு
மிடறு தண்ணீர்குடிக்கிறானோ அவனுக்கு மௌத்து கிடையாது; மே
லும் அவனுக்கு அல்லாகுதஆலாவின் புறத்தில் நின்றுதான் மௌ
த்துவரவேண்டும்” என்று சொல்லவும் துல்கர்னைன் அவர்கள், அந்த
மலக்கைநோக்கி, “அந்தச்சுனை இருக்குமிடம் உமக்குத்தெரியுமா”?
வெனக்கேட்க அவர், “அவ்விடம் எனக்குத் தெரியாது; ஆயினும்
வானத்திலுள்ளவர்களாகிய மலக்குகள் பேசிக்கொள்ளுகிறதாவது:
அல்லாகு தஆலா பூமியில் அதிக இருளான ஓர் இடத்தைப்படைத்
திருக்கிறான்; அங்கு மனுக்களாலும் ஜின்களாலும் போகமுடியாது.
ஆதலின், அந்தச்சுனை அவ்விடத்தில் தான் இருக்கிறதென்று நாங்
கள் அபிப்பிராயப்படுகிறோம்” என்று அவர்சொல்லிமுடித்தார்
பிறகு துல்கர்னைன் அவர்கள் அக்காலத்தில் இருக்கப்பட்ட எல்லா
உலமாக்களையும் தம்முடைய ராஜசபையில் வரவழைத்து “நீங்
கள் மாவுல் ஹயாத்தென்னும் சுனை இருக்குமிடத்தை அறி
வீர்களா?” வெனக்கேட்டபோது அவர்களனைவரும், “அப்படிப்
பட்ட ஒரு சுனையை நாங்கள் அறிந்ததில்லை” என்று பதில் அளித்து
விட்டார்கள். மறுபடியும் துல்கர்னைன் அவர்கள் அவர்களிடம் “உங்
கள்புத்தியில் அதிகமேவார் இருளான இடம் தோன்றுகிறதா?” என்
றுகேட்டபோது அவர்களில் ஓர் ஆலிம்மாத்திரம் (அவருக்கு லுக்
மானுல் ஹக்கீம் என்று பெயர்சொல்லப்படுகிறது) சொன்னார்: “நான்
ஆதம் அலைகிஸ்ஸலாமுடைய வசியதுநாமாவில் அந்த இருள் இருக்
குமிடத்தை ஓதியிருக்கிறேன்; அது பொழுது அடையுமிடத்தில்

இருக்கிறதாய் அதில் சொல்லப்படுகிற "தென்று சொன்னார். பிறகு துல்கர்னைன் அவர்கள் அந்த இருள் இருக்கிற இடத்தைக்கண்டுபிடிக்கிறதற்காகவேண்டிப் பெரும்படையுடன் பிரயாணப்பட்டு சஞ்சாரம் செய்தவர்களாய்ப் பனிரண்டு வருடம் யாத்திரைசெய்ததின் பிறகு அந்த இருள் இருக்குமிடத்தின் ஓரமாய் வந்துசேர்ந்தார்கள். அந்த இருளைக் கண்ணுற்றுப் பார்க்கையில் அது இரவின் இருளைப்போலல்ல; அதேதாபார்க்கக்கூடாத அடர்த்தியாகிய ஏகாந்தப் புகைச்சலாயிருக்கிறது; துல்கர்னைன் அவர்கள், அவர்களுடைய சேனைகளையொன்றுகத்திரட்டி தாங்கள் அந்த இருளுக்குள் போகவேண்டுமென்ற நாட்டத்தை வெளிப்படுத்தவும், அவர்களனைவர்களும் அதற்குள் போகக்கூடாதென்று தடுத்தார்கள். அப்போது துல்கர்னைன் அவர்கள் தம்முடன் வந்திருக்கிற உலமாக்கள் உக்மாக்கள் இடம் யோசனைகேட்டுக்கொண்டு தாங்கள் அதற்குள் போகிறதற்காக வேண்டி ஆறாயிரம் ஜனங்களைத் தெரிந்தெடுத்தார்கள். அவர்களோ வாலிபப் பிராயமுடையவர்கள். அவர்களுக்கு ஏறிப்போக குட்டி போடாத பெண்குதிரைகளையுங் கொடுத்து கிழுரு அலைகிஸ்ஸலாமை இரண்டாயிரம் சேனைகளுக்குத் தலைவராக நேமித்து முன்னால் போகும்படி கட்டளையிட்டார். இது நிற்க துல்கர்னைன் அவர்கள் தாங்கள் நாடியிருக்கிற நாட்டத்தை, மறைத்த வண்ணமாகவே வைத்துக்கொண்டிருந்தார்கள். எங்கினும் கிழுரு அலைகிஸ்ஸலாமுக்கு அல்லாகுதஆலாவின் ஹிதாயத்தினால் அறிவிக்கப்படவும் அந்தமாவுல் ஹயாத்தென்னும் சுனை அந்த இருளினுள் தான் இருக்கக்கூடுமென்று அபிப்பிராயப்பட்டார்கள். அந்த இருளில் நடக்கிறபோது அதில் மைதானமொன்று அவர்களின் பார்வைக்குத் தெரியவரவும் அவர்கள் தங்கள் சேனைகளை மைதானத்தின் சமீபமாக நிற்பாட்டி விட்டு அச்சுனையிருக்கும் ஓரமாய்வந்துபார்க்க அவ்விடத்தில் ஓர் சுனையிருந்தது. அதின் ஜலம் பாலைவிட அதிக வெண்மை; தேனைவிடமெத்தருசியாயிருந்தது. பிறகு அவர்கள் அதில் குளித்து வொளுவும்செய்து சுக்ருக்காக இரண்டு ரகாஅத்தும் தொழுதுவிட்டு அதில் நின்றும் ஒரு மிடறு தண்ணீரும் குடித்துவிட்டுத் திரும்பிவந்து விட்டார்கள். ஆயினும் துல்கர்னைன் அவர்கள் அந்த இருளில்வழிதப்பிப்போய்த் தண்ணீரையும்பெற்றுக்கொள்ளவில்லை என்று. இன்னும் தப்சீரிப்யானில்வருகிறது சிக்கந்தர் துல்கர்னைன் அவர்கள் இருள் பூமிக்குள் புகுந்து நடக்கத் தயாரானபோது அவர் தமது ஜனங்களை நோக்கிவாகனங்களில் ஏதற்கு வெகுபார்வை தோற்றுமெனக் கேட்க

குதிரைக்கு என்று சொல்லப்பட்டது. பிறகு அவர்கள் குதிரைகளில் எதற்கு வெகுபார்வைதோன்று மென்று கேட்க, 'பெண்குதிரைக்கு' என்று சொல்லப்பட்டது. பெண் குதிரைகளில் எதற்கு அதிகப்பார்வைதோன்றுமென்றுகேட்க, 'குட்டிபோடாத பெண்குதிரையாயிருக்கு'மென்று சொல்லப்பட்டது. பிறகு துல்கர்னைன் அவர்கள் தங்கள் குதிரைப்படைகளில் நின்றும் ஆறாயிரம் குட்டிபோடாத பெண்குதிரைகளைத்தெரிந்தெடுத்து அவற்றில் ஆறாயிரம் சேனைகளையேற்றிக்கொண்டு மற்றவர்களைப்பின்னால் நிறுத்திவிட்டு அந்த இருளில் ஓர் இரவும்பகலும் நடந்தார்கள். ஆனால், அப்படைகளுக் கெல்லாம் கிழுரு அலைகிஸ்ஸலாமே தலைவராயிருந்தனர். அவர்கள் போனவழியில் மாவுல்ஹயாத்தென்னும் சுனையென்படவும் அவர்கள் அதனிடமாய்ச்சென்று அதில் குளித்துத்தண்ணீரும்குடித்தார்கள். இதுநிற்க சிக்கந்தர் துல்கர்னைனும் மற்றவர்களும் வழிதப்பி ஓர் கல்மேட்டில் நடக்கிறபோது சேனைகள் துல்கர்னைன் இடம் இதென்ன கற்களாயிருக்கின்றனவென்று கேட்க அவர்கள் அவர்களுக்குச் சொன்னதாவது: "நீங்கள் அவைகளை எடுத்துக்கட்டிக்கொள்ளுங்கள்; ஏனெனில் இதில் நின்று கொஞ்சமெடுத்தவர்களும், அதிகம் எடுத்தவர்களும் கைசேதப்படுவார்கள்" என்றுசொல்ல அவர்கள் அனைவர்களும் தங்களால் இயன்ற மட்டிலும் அக்கற்களைஎடுத்துத் தங்கள் தங்கள் வாகனங்களில் நிரப்பிக்கொண்டு அப்பால் அவர்கள் அந்த இருளைவிட்டு வெளிதனில் வந்து பார்க்கையில் அவைகளெல்லாம் பச்சை மாகதங்களாயிருந்தன. அப்போது அவர்கள் "அதிகமாக எடுத்தோமில்லையே" என்று கைசேதப்பட்டார்கள். இந்தச்செய்தி தப்சீர் ரூகுல்பயானில்வருகிறது. இன்னும் தவாரிகே அன்பியாவில்வருகிறதாவது கிழுரு அலைகிஸ்ஸலாம் அவர்களை சிக்கந்தர் துல்கர்னைன் பட்டாளத்திற்குத் தலைமையாக நேமித்துவிட்டுச் சொன்னதென்னவெனில், அந்த இருளில் ஒருவர் மற்றொருவரைப்பார்க்க முடியாதென்பது நிச்சயமே. அவ்வாறு இருக்க அப்போது என்னசெய்கிறதென்று ஹுகமாக்களிடம் கேட்க அவர்கள் சொன்னார்கள்: அப்படி நேரிட்டால் நம்முடைய ராஜ தர்பாரில் இருக்கிற இரத்தினக் கற்கள் இரவில் விளக்கைப்போல் பிரகாசிக்கத் தக்கவைகள். அவைகளை நம்முடன் எடுத்துக்கொண்டு போகவேண்டியது. சமயம் நேரிடும்போது அதன் பிரகாசத்தைக் கொண்டு இருளில் வழி நடந்துபோகலாமென்று சொன்னபோது துல்கர்னைன் அவர்கள் சொல்லியபடி இரத்தினக் கல்லொன்றை எடுத்து கிழுரு அலைகிஸ்ஸ

லாம் இடத்தில் ஒப்பித்துவிட்டு சிம்மாசனத்தையும் இராஜக்கிரீடத்தையும் வேலைக்காரர்களில் நின்று ஒரு புத்திமான் வசம்கொடுத்துவிட்டு பனிரண்டு வருடம் யாத்திரைசெய்ய வேண்டுமென்று சொல்லிவிட்டு அப்பால் தீன் முதலிய சாமான்கள் தயார்செய்தவர்களாக இருள்பூமிக்கு அப்புறம் இருக்கிற மாவுல் ஹயாத்தென்னும் சுனையைத் தேடிப் பிரயாணப்பட்டார்கள். அவ்வாறு பிரயாணப்பட்டு யாத்திரை செய்தவர்களாக பனிரண்டுவருடம் சென்றதின்பின் காபுமலைக்கிட்டவரவும் அங்குப் பாதைத்தவறி ஒரு வருடம்வரையில் சுற்றித்திரிந்தார்கள். கிஹுறு அலைகிஸ்ஸலாம் அவர்களும் பட்டாளத்தைவிட்டுத் தனித்துஒர் இருள்பாகத்தில்போய் அகப்பட்டுக்கொண்டார்கள். அப்போது அவர்கள் தங்கள் கைவசம் வைத்திருந்த லஅல் என்னும் இரத்தினக்கல்லை ஜேபிலிருந்து வெளியில் எடுத்து வைத்தபோது அதன் பிரகாசத்தினால் அந்த இருள்நீங்கி அல்லாகுதஆலாவுடைய கிருபை கடாக்ஷத்தைக்கொண்டு அவர்களுக்கு மாவுல் ஹயாத்தென்னும் சுனை தென்பட்டு அவர்கள் அதில் நின்றும் முகம் கைகால் கழுவிக்கொண்டு அதன் தண்ணீரையும் குடித்துவிட்டு அது கிடைத்ததின்பேரில் அல்லாகு தஆலாவை சுகுர் செய்தார்கள். அவன் அவர்களின் வாழ்நாளை நீளமாக்கி வைத்தான். பிறகு அவர்கள் அந்த இருளைவிட்டுத் திரும்பி வரும்போது மற்றொரு இருள்பாகமாகவந்து அகப்படவும் அந்த இரத்தினக்கல்லை பூமியில் எடுத்து வைத்தபோது ஏகாந்த வெளிச்சமுண்டாயிற்று. அப்போது அநேகபட்டாளங்களும், அந்தஇருளில் வழி தப்பிக் கிடந்தவர்களனைவரும் அதன் வெளிச்சத்தினால் கிஹுருஅலைகிஸ்ஸலாம் இருக்குமிடம்வந்து சேர்ந்தார்கள் என்று. இவ்விடத்தில் சுல்தான் சிக்கந்தர் துல்கர்னைனுடைய நடைபாகத்தை எழுத இடமாயிருப்பதால் சிலவற்றை எழுதி முடிப்பாம்.

### 7-வது பஸல் (சுல்தான் சிக்கந்தர் துல்கர்னைனுடைய கீர்த்தனை பிரபந்தத்தில் பேசும் பிரிவு.)

சிக்கந்தர் துல்கர்னைன் அவர்கள் பைலகூஸ் யூனானி உடைய குமாரர். அவர் இஸ்கந்திரியாவென்னும் ஊரில்பிறந்தார். இதின் காரணத்தினாலேயே அவருக்குச் சிக்கந்தர் என்னும் பேர் சொல்லப்படுகிறது. இன்னும் மறுகொளவில் வருகிறது: அவர் பிறந்தது ரூம் பட்டணத்திலாயிருக்குமென்று வருகிறது. தவிர அவர் ஆயிரத்தி ஐநூறு வருடம் உலகத்தில் ஜீவித்திருந்து அடங்கலையும் கட்டி அரசாண்டு

உலகத்தைச் சுற்றிப்பார்த்தார். அவர்கள் நபி என்பதில் கிலாபு வந்திருக்கிறது. அவர்களின் பட்டப்பேர் துல்கர்னைன். அதற்குப் பொருளாவது இரண்டு கொம்புடையவர் என்பதேயாம். அவ்வாறு அப்பேர்கிடைத்தகாரணமாவது அவர்கள் சூரியனின்இரண்டு கொம்புகளென்னும் எழுவானுக்கும் படுவானுக்கும் போயிருக்கிறபடியால் அப்பேர்கொடுக்கப்பட்டதென்றும், இன்னுமொரு ரிவாயத்தில் வருகிறதாவது: அவர்களின் தலையில் சிறிய இரண்டு கொம்புகள்முளைத்திருந்தனவென்றும் அவற்றை மறைத்துத் தலைப்பாகைகட்டினார்களென்றும் அவர்களில் நின்றுதான் முன் தலைப்பாகையுடைய அசல் உண்டானதென்றும் மஆலிமே தன்ஸீல், மதாரிக் காஸின், கமாலைன் முதலிய தப்சீர்களில் விவரமாக எழுதப்பட்டிருக்கிறது. இன்னும் ரிவாயத்து வருகிறது: துல்கர்னைனுடைய தகப்பனார் வம்பனாகிய ராஜனாயிருந்தார்.

அவர்மௌத்தாகிவிட்டபோது துல்கர்னைன் தனது தகப்பனாருக்குப் பகரமாய் ராஜ அதிகாரத்தில் வரவும் பெருமையும் வம்புத்தனமும் அவருக்கு அதிகமாகிவிட்டன. பிறகு அல்லாகுதஆலா ஒரு சாலிஹான தோழரை அவரிடம் போகும்படி அனுப்பினான். அவர் துல்கர்னைனிடம் வந்து சொன்னார்: "ஆய் மனிதனே! நீர்மௌத்தாவதற்கு முன்பாகவே வம்புத்தனத்தைவிட்டு மீண்டு அல்லாகுதஆலா அளவில் தவ்பாச்செய்யும்" என்றுசொல்லவும் அவர்பேரில் துல்கர்னைன் மெத்தவும்கோபமாகி அவரைச்சிறைச்சாலையில் கொண்டுபோய் அடைத்துவிடும்படி கட்டளைசெய்தார். அவ்வாறேசெய்யப்பட்டது. அப்பால் அவர்மூன்று நாள்வரையில் கைதியாயிருந்து வருகையில் அல்லாகுதஆலா அவர்களளவில் ஒருமலக்கை அனுப்பினான். அவர் சிறைச்சாலையின் முகட்டையுடைத்து அம்மனிதரை அதனைவிட்டு வெளிப்படுத்திவிட்டார். மறுநாள் சுபுகு ஆகியபோது துல்கர்னைனுக்கு இச்சமாசாரம் எட்டவும் அவர் சிறைச்சாலையில்வந்து பார்க்க, அதன் முகடு திறக்கப்பட்டிருப்பதைக்கண்டவுடன் அவரின்சரீரம் பயத்தால் நடுக்கம் கொண்டது. பிறகு அவர் தன்மனதில்எண்ணினதாவது: நமது வல்லமை அல்லாகு தஆலாவுக்கு முன்பில் பல ஹீனமானதாயிருக்கும் என்று சொல்லிக்கொண்டு ஆச்சரிய முற்றவராய்ச் சிறைச்சாலையில் அடைக்கப்பட்டிருந்த மனிதனைத் தேடிப் பார்க்கையில் அவர் உயர்ந்த மலையொன்றின்மேல் தொழுதுகொண்டிருக்கிறார் அவர் துல்கர்னைனைப் பார்த்தபோது அவரைநோக்கிச்

சொன்னதாவது: நீர் இப்போது வம்புத்தனத்தை விட்டுமீண்டு அல்லா அளவில் தவ்பாசெய்து மீளுமென்று சொன்னார்.

இதை துல்கர்னைன் கேட்டபோது அவர் தம்முடைய பட்டாளத்தை நோக்கி அம்மனிதரைப் பிடிக்கும்படிக்குக்கட்டளை இடவும் அவர்கள் அவரைப் பிடிக்கப்போகையில் அல்லாகு தஆலா அவர்களின்பேரில் நெருப்பைப்பிறக்கிஅவர்களை எரித்துவிட்டான்இதை துல்கர்னைன்கண்ணுற்றுப் பார்த்தவராகக் கீழேவிழுந்தார். தெளிவுவந்த பிறகு அவர்அல்லாகுதஆலா இடத்தில் தவ்பாசெய்து மீண்டு அந்த சாலிஹான மனிதருக்கு அடிபணிந்துவிட்டார். பின்பு துல்கர்னைன் அவர்கள் வம்பர்களாகிய ராஜாக்களையெல்லாம் அடக்கி அரசாண்டு மற்றஜனங்களையும் அல்லாகு தஆலாவின் மார்க்கத்தில் அழைத்து தொழுகிறதற்காகவேண்டி பிரமாண்டமான மஜ்ஜிது ஒன்று கட்டி முடித்தார். அதே உயரத்தில் நூறுமுழம் நெடுகத்தில் நானூறுமுழம் உள்ளதாகக் கட்டிவைத்தார். என்றும் இவர்தான் மஜ்ஜிது கட்டிவைத்தவர்களில் முந்தினவர்என்றும் சொல்லப்படுகிறது. இன்னும் ரிவாயத்துவருகிறது: அல்லாகு தஆலா துல்கர்னைன் அவர்களுக்கு வல்லமையும் புத்தியும் சகலவதுகளையும்கொடுத்து இருளையும் ஒளியையும் மேகத்தையும் வசமாக்கிக் கொடுத்திருந்தான்: ரிவாயத்து, இபுனு அப்பாஸ் ரலியல்லாகு அன்கு சொன்னார்கள்: துல்கர்னைன் அவர்கள் படைகளுடன்போகையில் மக்காவுக்கு நேராகவரவும் அப்போது மக்காவில் இபுராஹீம் அலைஹிஸ்ஸலாம் இருந்தார்கள். அவர்கள் அங்கிருப்பதைக் கேள்விப்பட்டு உடனே வாகனத்தை விட்டுக் கீழிறங்கி துல்கர்னைன் சொன்னதாவது: அல்லாகுதஆலாவின் தோழரஇபுராஹீம் அலைஹிஸ்ஸலாமிருக்கிறவூரில் நாம்வாகனத்தின்பேரில் ஏறிக்கொண்டுபோவது தகாதென்று சொல்லிவிட்டு வெறுங்காலால் நடந்தவர்களாய் இபுராஹீம் நபி சமீபத்தில்வரவும் அவர்கள் இவர்களுக்கு ஸலாம்சொல்லி கட்டி அணைத்தார்கள்.

இவர்கள் ஸலாம்சொல்லுமிடத்தில் கழுத்தைக்கட்டி அணைத்தவர்களில் முந்தினவர்களென்று சொல்லப்படுகிறது. அப்போதுதான் துல்கர்னைனுக்கு மேகத்தை வசமாக்கிக்கொடுக்கப்பட்டது. ஆதலின் பொருட்டு அவர்கள் யாத்திரை போக நாடினால் அவர்களையும் அவர்களின் படைகளையும் ஆயுதம் முதலிய சாமான்களையும் மேகம் சுமந்துகொண்டுபோகும். மேலும் அவர்களுக்கு ஒளியையும் இருளையும் வசமாக்கிக்கொடுக்கப்பட்டிருந்தன. அவர்கள் நடந்தால் ஒளிவு முன்னிலும் இருள் பின்னாலும் அவர்களைப் பொதிந்துகொண்டே போ

கும். ரிவாயத்து துல்கர்னைன் அவர்கள் மக்ரிபு புறம் போகும்போது
எந்த கவுமுகளைக் கண்டார்களோ அவர்களையெல்லாம் ஈமானில்
அழைத்து அவர்களுக்கு வழிப்பட்டவர்களை ஒப்புக்கொண்டார்கள்;
வழிப்படாதவர்களை இருள்போய்ப் பொதிந்து அவர்களின் பட்ட
ணங்களும் கோட்டை கொத்தளம் வீடு வாசல் கண் மூக்கு வாய்
செவி வயிறு முதலானவைகளில் நிரம்பி வருத்தப்படுத்தும். அப்
பால் அவர்கள் ஈமான் கொள்வார்கள். இப்படியே ஊராகப்போய்
ஜனங்களை இஸ்லாமாக்கிக் கொண்டே அல்லாகு தஆலா சொல்லிய
கவுமுகளையும் கண்டு அவர்களையும் மற்றவர்களைச் செய்தது
போல் செய்து அவ்விடமிருந்து எட்டு இரவும் பகலும் இருளில்
நடந்து பூமியைச்சூழ்ந்துகொண்டு இருக்குமென்னத்தக்கதானமலை
யை கண்டார். அதில் ஒரு மலக்கு தஸ்பீகைக்கொண்டு சத்தத்தை
உயர்த்தியவராய் அம்மலையை பிடித்துக்கொண்டு (சுபுஹானறப்பீ
மினல்அஸலி இலாமுன்தஹத் தஹ்றி, ஒசுபுஹான ரப்பீமில் அவ்வ
ரித்துன்யா இலா ஆகிரிஹா, ஒசுபுஹான ரப்பீமின் மவுலஈகப்பீ இ
லாஅர்ஷீ ரப்பீ ஒசுபுஹான ரப்பீமின் முன்தஹல்துல் மதி இலன்
நூரி) என்று சத்தமிட்டவராக நின்றார். அவரை துல்கர்னைன் அவர்
கள் பார்க்கவே அல்லாகு தஆலாவுக்கு ஸூஜூது செய்தவர்களாக
மோதிக்கீழேவிழுந்துமிரண்டு தலையைக்கிளப்பவே அம்மலக்கானவர்
இவர்களைப்பார்த்து ஆதமுடைய மக்களில் நின்றும் ஒருவரும் இந்த
லத்தை எத்திக்கொள்ளவில்லை. அப்படியிருக்க எப்படி நீர் எத்திக்
கொண்டீர் என்று கேட்கவும் அப்போது அவர்கள் சொன்னார்கள்:
அல்லாகுதஆலா இதனை இயன்றதாக்கித்தந்தான். ஆனால் நீர் இதனை
ப்பிடித்திருக்கும் காரணமென்ன வென்று கேட்டபோதுசொன்னார்.
இதுதான் பூமியைச்சூழ்ந்திருக்கின்ற காபுமலை; இதைவிட பிரமாண்
டமானமலை உலகத்தில்கிடையாது. நானே இதைக்கொண்டு சாட்ட
ப்பட்ட மலக்கு. இம்மலை பூமியில் இல்லாதிருக்கில் பூமியிலிருப்ப
வர்களோடு பூமி கவிழ்ந்துவிடும் என்றார். அப்பால் துல்கர்னைன் அவ
ர்கள் திரும்பிவருகையில் அந்த மலக்கை நோக்கி நீர் எனக்கு வஸீத
னும் வசியத்துசெய்யுமென்று சொல்லவும் அம்மலக்கு சொன்னார்:
ஆய் துல்கர்னைனே! நாளை ரிஸ்குக்கு இன்று துக்கப்படவேண்டாம்.
இனி இன்றை அமலை நாளைக்கென்றுவைத்துக் கொள்ளாதீர். தப்பி
விட்டகாரியத்தைப்பற்றி விசாரப்படாதீர். மெதுவைப்பற்றி பூண்டு
கொள்ளும், வம்பாக இராதீரென்று அந்தமலக்கு வசியத்து செ
ய்து அனுப்பிவைத்தார். அப்பால் துல்கர்னைன் அவர்கள் பொழுது

உதயமாகும் தலத்தை அடைகிறவரையில் நடந்து போகவும் அங்கு பொழுதானது ஒரு கவுமுகள்பேரில் உதயமாகிறதைக் கண்டார்கள். அந்தக் கவுமுகளுக்கு பொழுதின் சூட்டைக்காக்கக் கூடிய உடுமானம் கிடையாது. ஏனெனில் அந்த பூமிசிறுமணலானபடியால் வீடுகள் அதில் நிலைக்கிறதில்லை. அவ்வூர்மெத்தச் சூடானதினால் அவர்களின் முகங்கள் தோலுரிக்கப்பட்டது போலிருக்கும். இன்னும் அவர்களுக்குத் தலைமுடியும் புருவத்து முடியும் சரீரத்தின் முடியும் இல்லை. அவர்கள் பொழுது உதயமாகும்போது தண்ணீரில் அல்லது புடையில்புகுந்துகொள்கிறார்கள். அது உயர்ந்தபின் வெளிதனில்வந்து தங்கள் நிர்பாகத்துக்காக கடலில்போய் மீன்வேட்டையாடுகிறார்கள். அந்த கவுமுகள் இருக்குமிடத்திற்கப்பாலும் சில ஜனங்கள் இருக்கிறார்கள். அப்பால் துல்கர்னைன் அவர்கள் யாஜூஜ் மாஜூஜ் கூட்டத்தை அடைக்கப்பட்டிருக்கிற மலைக்கிடையே எத்துகிறவரையில் வேறுபாதைபிடித்து நடந்தார்கள். அந்த இரண்டுமலையும் துருக்கிதேசம் கடைசியின் பின்புறத்தில் இருக்கிறது. அம்மலைக்குப் புறமேதான் யாஜூஜ் மஜூஜ்கூட்டத்தார் குடியிருக்கின்றார்கள் பின்னர் துல்கர்னைன் அவர்கள் அவ்விடையை அடைத்தார்கள். இதற்கு குர்ஆனில்ஸத்து என்று பேர்வந்து இருக்கிறது. அந்த ஸத்துக்கு முன்பாக துல்கர்னைன் சிலகவுமுகளைக் கண்டார்கள், அவர்கள் பேச்சை வருத்தப்பட்டே அல்லது விளங்கமுடியாது. அன்னவர்கள் துல்கர்னைன் இடம் சொன்னதாவது: இவ்விடத்தில் யாஜூஜ்மாஜூஜ் கூட்டத்தாரிருக்கின்றார்கள். அவர்களோ பூமியில் மெத்தபஸாதுசெய்கிறார்கள். ஆனதினால் நீங்கள் அவர்களுக்கும் எங்களுக்குமிடையில் ஓர் திரையொன்றைபோடுங்கள். அதற்கு நாங்கள் செலவுதருகிறோமென்று சொல்லியபோது துல்கர்னைன் சொன்னார்கள்: நீங்கள் எனக்குயாதொன்றும் தரவேண்டியதில்லை; என்கிலும் நான் உங்களுக்கு சும்மாசெய்துவிடுகிறேன். ஆனால் நீங்கள் இரும்புத் துண்டுகளைக் கொண்டு வாருங்கள் என்றுசொல்ல அவர்கள் அப்படிப்பட்ட இரும்புகளுக்கு நாங்கள் எங்கேபோவோமென்று சொன்னபோது துல்கர்னைன், அவர்களுக்கு அவைகள் விளையும் தலத்தைக் காட்டிக்கொடுக்கவும் அவர்கள்போய் இரும்புகளைக்கொண்டுவந்தார்கள். துல்கர்னைன் இரண்டு மலைக்கிடையிலுள்ள தொலைதூரத்தை அளந்துபார்க்க அது நூறுகாதவழி தொலையாயிருந்தது. உயரம் நூறுமுழம் அகலம் ஐம்பதுமுழம் இருந்தன. அதற்குச்சரியாகக்குழி தோண்டிக்கொண்டு அதன்நீளம் அகலம் உயரம் சரிமட்டுக்கு இரும்புத்துண்டுகளையும்

விறகுளையும் கரிகளையும் ஒன்றுக்குமேல் ஒன்றாக அடுக்கி அந்த இரு
ம்பு இரண்டுமலையுடைய இருபுறமும் சரியாகவே அதைச்சுற்றி நெ
ருப்பையும் துருத்திகளையும் வைத்து ஊதும்படி வேலைக்காரர்களுக்
குச்சொல்லவும் அவ்வாறே அவர்கள் ஊதினார்கள்.

அது நெருப்புப்போலான உடனே துல்கர்னைன் அவர்கள்
செம்புகளைக் கொண்டு வரச்சொல்லினார். அவ்வாறே கொண்டுவரப்
படவும் அவர்கள் அந்த இரும்பின்பேரில் உருக்கின செம்பை ஊற்ற
வேலைக்காரர்களும் அப்படியே செய்தார்கள். அப்பொழுது இரும்பும்
செம்பும்ஒன்றோடு ஒன்றுசேர்ந்து பாரிய ஒருமழு மட்டையானமலை
போலாகிவிட்டது. அப்பால் யாஜுஜு மாஜுஜு கூட்டத்தார்வந்து
அதில் ஏறவும்துளைக்கவும் நாடினார்கள். அதுபிரமாண்டமான உயர
மாயிருப்பதினால் அவர்கள் அதின் பேரில் ஏறவும் அதைத் துளைக்
கவும் முடியாமலாகிவிட்டது. பிறகு துல்கர்னைன் சொன்னார்: இந்த
திரையையுண்டாக்க எனக்கு வல்லமை கொடுத்தது எனது நாய
னின்கிருபை; அவனின் வாக்கியப்பாடாகிய கியாமநாள்வந்திட்டால்
அவன் அதை இடித்து விடுவானென்று இன்னும் நகுல் பயானில்வ
ருகிறது: சிக்கந்தர் துல்கர்னைன் அவர்கள் இருள் பூமிக்குப்போய்
மீண்டுவந்த பின் ஸவுரென்றபட்டணத்தில் வந்து வபாத்தாகி அ
டக்கமானார்களென்றும் இன்னும் மற்றோர்கவுலின்படி இரண்டுமலை
யிடையைக் கட்டிவிட்டு பைதுல் முகத்தசுக்குவந்து அவ்விடத்தில்
வபாத்தானார்களென்றும் வருகிறது. நபியல்லாகு அன்கு.

8-வது பஸல் (அல்லாகு தஆலா மூசா அலைகிஸ்ஸலாமை கிலுரு
அலைகிஸ்ஸலாமளவில் அனுப்பிய விஷயத்தில் பேசும் பிரிவு.)

ஸஹீகுல் புகாரிஸஹீகுல் முஸ்லிம் தப்ஸீர் மஆலிமுத்தன்
ஸீல்மற்றும் தப்ஸீருகளிலும் வருகின்றது: ரிவாயத்துஉபைபிபுனுக
அபுறவிபல்லாகு அன்கு அவர்கள் சொல்லுகிறார்கள்: நான் ரசூல் சல்
லல்லாகு அலைகிவசல்லம் அவர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன்;
ஒருபோது மூஸா அலைகிஸ்ஸலாம் பனி இஸ்ராயில்களில் ஒருகுத்பா
ஓதினார்கள்; அப்போது ஜனங்கள் அவர்களிடத்தில் மனிதர்களில்
மிக அறிந்தவர்கள் யாரென்று கேட்க, அப்போது மூஸா அலைகிஸ்
ஸலாம் நான் மெத்த அறிந்தவனென்று சொல்லவும் அவ்வாறு
சொன்னதின்பேரில் அல்லாகு சுபுஹானகு தஆலா அவர்களை வம்
பித்து அவர்களுக்கு வஹீ அனுப்பினான். ஆப் மூஸாவே எனது
அடியார்களில் நின்றுமொருவர் இரண்டு கடல்சந்திக்கு மிடத்தில்
இருக்கிறார்; அவர் உம்மைக்காண மெத்த அறிந்தவரென்றுசொல்ல

அப்போது மூஸா அலைகிஸ்ஸலாம், ஆய் எனது நாயகா! நான் எப்படி அவரிடத்தில் போய் சேருவேன் என்றார்கள். அப்போது அல்லாகுதஆலாவின் நாக்குமுவந்தது: ஆய்மூஸாவே! நீர் ஒரு கூடையில் பொரித்தமீன் ஒன்றை எடுத்துக்கொண்டு நடந்துபோம்; அது எவ்விடத்தில் காணாமல் போயிற்றோ அவ்விடத்தில்தான் அவரிருப்பார் என்றுசொன்னான். பின்பு மூஸா அலைகிஸ்ஸலாம் மீனை எடுத்து அவர்களின் காதிமாகிய யூஷஉ அலைகிஸ்ஸலாம் இடம் கொடுத்து இருவர்களும் நடந்து சஞ்சாரம் செய்தவர்களாய் ஒரு பாறைக்கல்லின் சமீபத்தில் வந்து சேர்ந்தபோது மூசா அலைகிஸ்ஸலாம் நடந்து வந்த அலுப்பினால் அக்கல்லின்பேரில் தலைவைத்து நித்திரை கொண்டார்கள். இது நிற்க அந்தமீன் கூடையைவிட்டு வெளிப்பட்டு துளும்பினதாய் சமுத்திரத்தில் சுரங்கம் செய்துகொண்டுபோயிற்று. அல்லாகுதஆலா பொரித்த மீன்பேரில் தண்ணீர் ஒடுகிறதை தடுத்து விட்டான். அதுமாடம்போலாகி விட்டது. பிறகு மூஸா அலைகிஸ்ஸலாம் விழித்தார்கள். அப்போது யூஷஉ அலைகிஸ்ஸலாமுக்கு அந்த மீன்காணாமற் போயின சமாசாரத்தைக் குறித்து மூஸா அலைகிஸ்ஸலாமிடம் சொல்ல ஞாபகமில்லாமற்போனது. அப்பால் அந்தப்பகல் இரவு முழுமையும் நடந்து மறுநாள் சுபுகுஆகியபோது மூஸா அலைகிஸ்ஸலாம் யூஷஉ அலைகிஸ்ஸலாமிடம் நம்முடைய காலை ஒஜீபனத்தைக்கொண்டுவாரும்; நாம் இந்தஸபரில்மெத்த வருத்தத்தை அடைகிறோம் என்றுசொன்னார்கள். இதுநிற்க மூசா அலைகிஸ்ஸலாமை எங்கேபோயிருக்கும்படி கட்டளை கொடுக்கப்பட்டிருந்ததோ அதைக் கடந்துபோனதினால் அவர்களுக்கு வருத்தம் தோன்றிற்று. பின்னர் யூஷஉ அலைகிஸ்ஸலாம் மூஸா அவர்களுக்குச் சொன்னதாவது: நாம் அந்தக்கல்லில் நித்திரைகொண்டபோது அம்மீன் உயிர்பெற்று போயிற்று. ஆகிலும் நான் அதன்விஷயத்தை தங்களுக்குச் சொல்வதை விட்டும் ஷைய்தான் என்னை மறக்கடித்து விட்டான் என்றும், அந்தமீன் ஆச்சரியமுற்ற நடப்பைக்கொண்டு கடலில் பாதையை உண்டாக்கினதாகப் போயிற்று என்றும் சொன்னார்கள். அப்போது மூஸா அலைகிஸ்ஸலாம் சொன்னார்கள்:

நாம் யாரைத் தேடிவந்தோமோ அவர்கள் அங்குதானிருக்கிறார்களென்று சொல்லிவிட்டு இருவர்களும் தங்கள் பாதத்தின் நடத்தைக்கண்டு பிடித்து பழைய கல்லில் வந்து சேரவும் அங்கு கிலுரு அலைகிஸ்ஸலாம்ஒரு போர்வையை போர்த்தினவர்களாக உட்கார்ந்திருப்பதைப்பார்த்துமூசா அலைகிஸ்ஸலாம் அவர்களுக்குசலாம் சொல்

லவும் அவர்கள் ஜவாபு சொல்லிவிட்டு நீர் யாரென்று கேட்டார்கள்.
அவர்கள் நான் மூசா என்று சொல்ல அதற்கவர்கள் நீர் பனீ இஸ்ரு
யீல்களிலுள்ள மூசாவா என்று கேட்க அவர்கள் ஆமென்று சொல்
லிவிட்டுச் சொன்னதாவது: நான் தங்களிடம் வந்திருக்கிறேன்; ஆன
தால் தங்களுக்கு படித்துக் கொடுக்கப்பட்டிருக்கிற இல்மை நீங்கள்
எனக்குபடித்துக்கொடுங்களென்று கேட்க அவர்கள் சொன்னார்கள்:
அய்மூசாவே அல்லாகுதஆலா எனக்கு சில இல்மைபடித்துக் கொடு
த்திருக்கிறான்; அதைநீர் அறியமாட்டீர்; இன்னும் சில இல்மை உம
க்குபடித்துக் கொடுத்திருக்கிறான்; அதை நான் அறியமாட்டேன்
என்றபோது மூசா அலைகிஸ்ஸலாம் நான் இதைப் படிக்கிறதற்காக
வேண்டி தங்களைத் தொடருகிறேன் என்றுசொல்ல கிலுரு அலைகிஸ்
ஸலாம்சொன்னதாவது: அய்மூஸாவே! நீர் அதின்பேரில் ஸபூர்செய்
வதற்கு சக்தி பெறுததுமன்றி அதைன்னாங்க அறிவதுஉம்மால்கூடா
தகாரியமாகஇருக்க எவ்வாறு நீர் அதின்பேரில் ஸபூர்செய்வீரென்று
சொல்ல மூசா அலைகிஸ்ஸலாம் அவர்கள் சொன்னார்கள்: அல்லாகு
தஆலா நாடினால்நீங்களென்னை ஸபூர் செய்தவர்களாக காணுவீர்கள்;
நான் தங்களுடைய எந்தஹுக்முக்கும் சிறிதும் விகற்பம் செய்யமா
ட்டேன் என்றுசொல்லவும் அதற்கு கிலுரு அலைகிஸ்ஸலாம் சொன்
னதாவது: அப்படி நீர் என்னைத்தொடரவேண்டுமாகில் நான் எந்த
வஸ்துவின் சமாசாரத்தையும் உமக்கு அறிவிக்கிறமட்டிலும் நீர் அ
தைக்குறித்து என்னிடம் கேட்கக்கூடாதென்று சொல்லிவிட்டு இரு
வர்களும் கடலோரமாக நடந்து வருகிறபோது அத்திசையாய் ஒரு
கப்பல்வரவும் அக்கப்பலுடையவர்களிடம் கிலுரு அலைகிஸ்ஸலாம் எ
ங்களையும் அதில் ஏற்றிக்கொள்ளுங்களென்று சொல்ல அக்கப்பலு
டையவர்பணம் காசு யாதொன்றும் வாங்காமல் சும்மா ஏற்றிக்கொ
ண்டார் அப்பொழுது ஒரு குருவி கப்பலின் ஓரத்தில்வந்து உட்கார
ந்துகொண்டு தன்சொண்டை சமுத்திரத்தில்விட்டு இரண்டொரு
மிடறுதண்ணீர்குடித்தது. அப்போது கிலுரு அலைகிஸ்ஸலாம்சொன்
னார்கள்: அய்மூசாவே! உம்முடைய இல்மும் நமது இல்மும் அல்லா
குதஆலாவின் இல்மளவில் சேர்த்துப் பார்த்தால் அக்குருவிசொண்டு
கொண்டு அள்ளிய தண்ணீர்மாத்திரமே ஒழியவேறில்லை என்றார்கள்
பின்புகப்பல்போகும்போது கிடீரென்று கிலுரு அலைகிஸ்ஸலாம் ஒரு
விதமான ஆயுதத்தினால் கப்பலில் நின்றுமுள்ள பலகையைக் கழற்ற
வும்மூஸா அலைகிஸ்ஸலாம் அவர்களைப் பார்த்து நீங்கள் என்னவேலை
செய்கிறீர்கள்? அக்கப்பலுடையவர்கள் நம்மிடம் யாதொன்றும் வாங்

காமல்சும்மா ஏற்றிகொண்டார்கள் அப்படியிருக்க, நீங்கள் அக்கப்பலை பின்னப்படுத்துவதுமல்லாமல் கப்பலுடையவர்களைக் கடலில் மூழ்கச்செய்யவாநாடுகிறீர்கள்? இது மெத்தப் பழிப்பானகாரியம்;" என்றுசொல்ல, அதற்கு கிலுரு அலைகிஸ்ஸலாம் சொன்னார்கள்: "ஆய் மூசாவே! நீர்ஸபூரு செய்ய சக்திபெறமாட்டீரென்று நான் உமக்குச்சொல்லவில்லையா" வென்றார்கள். அவ்வாறு சொல்லவும் அதற்கு மூஸா அலைகிஸ்ஸலாம், "ஆம்; நான் தாங்கள்சொல்லியதை மறந்திட்டேன். ஆனதுபற்றித் தாங்கள் அதின்பேரில் என்னிடம் குற்றம் பிடிக்காதீர்கள்" என்று சொன்னார்கள்.

ரிவாயத்து:-நாயகம் கிலுருஅலைகிஸ்ஸலாமும் மூசா அலைகிஸ்ஸலாமும் கப்பலைத்தேடிக் கடலோரம் போகவும் கப்பல்வந்தது. பின்னர் இருவர்களும் கப்பலில் ஏறியபோது, அக்கப்பலில் இருக்கப்பட்டவர்கள், கப்பலுடையவனுக்கு, "இவர்கள் இரண்டுபேரும் திருடர்கள்" என்றுசொல்ல, அவர்களுக்குக் கப்பல்காரன், "இவர்களின் முகம் நபிமார்களுடைய முகம்போலிருக்கிறதை நான்பார்க்கிறேன்" என்றுசொல்லிவிட்டு, காசுபணம் வாங்காமல் அவர்களைச் சும்மாவற்றிக்கொண்டான். பின்புகப்பல்ஆழியகடலில்போனபோது, கிலுருஅலைகிஸ்ஸலாம் அவர்கள், கப்பலில் தண்ணீருக்குச்சமீபமாய் அடுத்துள்ளபலகை ஒன்றைக்கழற்றிவிட மூசா அலைகிஸ்ஸலாம் தங்களுடைய வஸ்திரத்தினால் அதை அடைத்தார்கள் அப்போது கிலுரு அலைகிஸ்ஸலாம். அவர்கள், ஒருபளிங்கிக்கல்லை எடுத்து அதற்கு அண்டைபோட்டார்கள்.

ரிவாயத்து:-கிலுருஅலைகிஸ்ஸலாம் கப்பலை ஓட்டையாக்கவே, மூஸாஅலைகிஸ்ஸலாம் ஒருபக்கம் தனியாகஇருந்து, மனதிற்குள் சொல்லிக்கொண்டிருந்தது என்னவெனில், "நாம் இவர்களைத்தொடர்ந்து என்னசெய்யபோகிறோம்; நாம்பனி இஸ்றாயீல்களிடமிருந்தாலும் அந்தியும் சந்தியும் அவர்களுக்கு அல்லாகுதஆலா உடையவேதத்தை வோதிக்காட்டலாம்; அவர்கள் நமக்கு வழிப்படுவார்கள்" என்று அவர்கள் மனதில் நினைத்தார்கள். அந்நினைப்பு முடிவதற்குள், அவர்களைநோக்கி கிலுருஅலைகிஸ்ஸலாம் சொன்னதாவது: ஆய் மூசாவே! நீர் உமதுமனதில் நினைத்ததை இப்போது நான் உமக்குச் சொல்லவா" என்றார்கள். அதற்கு மூசாஅலைகிஸ்ஸலாம் "அப்படியே சொல்லுங்கள்" என்றார்கள். அப்போது கிலுருஅலைகிஸ்ஸலாம் அவர்கள் நினைத்ததெல்லாம் விவாமாகச் சொல்லவும், மூசா அலைகிஸ்ஸலாம் அதெல்லாம் உண்மை என்று ஒப்புக்கொண்டனர்.

அப்பால் கிலுரு அலைகிஸ்ஸலாமும், மூஸா அலைகிஸ்ஸலாமவர்களும் கப்பலைவிட்டிறங்கிக் கடலோரமாய்ப் போகிறபோது, கிலுரு அலைகிஸ்ஸலாம் வழியில் ஒரு பையனைக்கண்டார்கள். அவன்மற்றும் பிள்ளைகளோடு விளையாடிக்கொண்டிருந்தான். அவர்கள் அவனைத் தங்கள் கையினால் அவனின் தலையைப்பிடித்து முறுக்கிவிட அல்லது ஒரு கவுலின்படி கத்தியைக்கொண்டு அறுத்துவிட, அவன் மறணமடைந்தான். அப்போது மூசா அலைகிஸ்ஸலாம் கிலுரு அலைகிஸ்ஸலாமை நோக்கி, “நீங்கள் துப்புரவான ஒரு ஆத்மாவை யாதொரு பிழை இல்லாமல் கொன்றுவிட்டீர்கள்; இதுவோ மெத்த பழிப்பான காரியம்” என்று சொல்லவும், கிலுரு அலைகிஸ்ஸலாம் அவர்கள், மூசா அலைகிஸ்ஸலாமுக்கு, “நீர் என்னுடன் சபூரு செய்ய சக்தி பெறமாட்டீரென்று நான் உமக்குச் சொல்லவில்லையா” என்று சொல்ல, அவர்கள் ஆமென்று சொல்லிவிட்டு, “நான் இனிமேல் தங்களிடத்தில் எந்த கருமத்தைக் குறித்தும் கேட்டால் நீங்கள் என்னைச் சேரவேண்டாம்; என்கிலும் நான் தங்களிடத்தில் அதை மன்னிக்கக்கேட்டுக்கொள்ளுகிறேன்” என்றார்கள்.

ரிவாயத்து:-கிலுரு அலைகிஸ்ஸலாம் அப்பையனைக்கொல்லவே மூஸா அலைகிஸ்ஸலாம், அவர்களைப்பார்த்து, “நீங்கள் மெத்த குறைத்தலான காரியத்தைச் செய்துவிட்டீர்கள்” என்று சொல்லவும், கிலுரு அலைகிஸ்ஸலாம் அவர்கள் கோபமுற்று, அந்தப்பையனின் புயத்தின் தோலை உரிக்கவும், அதில் “ஹாதாகாபிருன்லா யூமினுபில்லாஹி இவன் காபிரானவன்; அல்லாகுத ஆலாவைக்கொண்டு ஈமான் கொள்ளமாட்டான்” என்று எழுதப்பட்டிருந்தது.

அப்பால் இருவர்களும் அவ்விடத்தை விட்டுப் பிரயாணித்து ஒரு சிறிய நாட்டினிடமாக வந்து சேர்ந்தனர். அந்தவூரின் பேர் ‘அந்தாக்கியா’ வென்று சொல்லப்படும். அங்குவந்து அவர்களிருவரும் அவ்வூரையுடையவர்களிடம் விருந்து தேடினதில் அவர்கள், இவர்களுக்கு விருந்து கொடுத்தார்களில்லை. பின்னர் அங்கு நூறுமுழம் உயரத்தில் ஒரு சுவர் இடிந்து விழுகிறதாக இருந்தது. கிலுரு அலைகிஸ்ஸாம் தங்கள் கையைக்கொண்டு அதற்கு சாடைகாட்டவே, அது நேராய்நிமிர்ந்து விட்டது. அப்போது மூஸா அலைகிஸ்ஸலாம், கிலுரைப்பார்த்து, “நாம் அவர்களிடம் விருந்துதேடினோம்; அவர்கள் நமக்கு விருந்தளித்தார்களில்லை; அப்படியிருக்க ஏன் நீங்கள் அவர்களின் சுவரைநேராக நிமிர்த்தினீர்கள்? அவ்வாறு நீங்கள் நிமிர்த்தி

யதைப் பார்த்தால் அதன்பேரில் கூலி எடுத்துப் புசிப்பதை நாடிய தாகத் தெரிகின்றது" என்றார்கள்.

ரிவாயத்து: கிலுரு அலைகிஸ்ஸலாமும் மூஸா அலைகிஸ்ஸலாமும் அந்தாக்கியாவென்னும் ஊருக்கு வந்தபோது அவ்வூரார்களிடம் ஜீவனம்தேட, அவர்கள் கொடுத்தார்களில்லை. அதைப்பற்றி அல்லாகு தஆலா, குர்ஆனில் ("பஅபவ் அன்யுளைய்யிபூஹுமா) யஅனி அந்தவூர்க்காரார்கள் அவர்களிருவருக்கும் ஜீவனம் கொடுப்பதை விட்டும் விலகிக்கொண்டார்கள்" என்று சொன்ன இச்சமாசாரத்தை அந்தவூரார், அறிந்து நபிசல்லல்லாகு அலைகிஸ்ஸல்லமிடம் அநேக தங்கங்களைக் கொண்டு வந்து கொடுத்து, "எங்களைப்பற்றி அல்லாகுதஆலா சொன்ன பழிப்பை நீக்க நாடுகிறோம்; ஆனதால் தாங்கள் (பஅபவ்) என்னும் சொல்லிலுள்ள பேயை தேயாக்கிப் புரட்டி (பஅதவ்) என்று ஆக்கிவிடுங்கள்" என்று சொன்னபோது, நபிநாயகம் சல்லல்லாகு அலைகிஸ்ஸல்லம், "அல்லாகுதஆலாவின் கலாமைப் புரட்டுகிறது அவனின் சொல்லில் பொய் சேருவதை வருத்திவைக்கும்; ஆதலால் அப்படிச்செய்ய முடியாது" என்று அவர்களுக்குச் சொல்லிவிட்டார்கள். (தகிகா பஅபவ் அன்யுளைய்யிபூஹுமா) என்றால் அதின் பொருள், 'அந்தவூர்க்காரார்கள் அவர்களிரண்டு பேருக்கும் விருந்து கொடுப்பதைவிட்டு விலகிக்கொண்டார்கள்,' என்பதாம். (பஅதவ்) என்றாக்கினால் அதின் பொருள், அந்தவூர்க்காரார் அவர்களுக்கு விருந்து வைக்க வந்தார்கள், என்பதாம்.

அப்பால் கிலுரு அலைகிஸ்ஸலாம் மூஸா அலைகிஸ்ஸலாமுக்கு சொன்னார்கள், "இதுதான் உமக்கும் நமக்கும் இடையில் உண்டான பிரிவினை; ஆனதால் நான் முந்திச்செய்து வந்த மூன்று காரியத்தின் மருமத்தை இப்போது உமக்கு அறிவிக்கிறேன்; அறிந்து கொள்ளும் 1-வது காரியம்: நாம் இருவர்களும் ஏறிய கப்பலானது கடலில் வேலை செய்யும் மிஸ்கின்களுடையதாக இருக்கும்; நான் அதை பின்னப் படுத்தியகாரணமாவது: அந்தக்கப்பலுக்குப் புறமே ஒரு ராஜன் வந்தான்; அவன்பேர் ஜலந்து. அவனுடைய வழக்கம் எந்தக்கப்பல் நன்றாக இருந்ததோ அதை வலுவந்தமாகப் பிடுங்கிக் கொள்ளுகிறதாக இருந்தது. ஆகையினால் நான், அதை பின்னப்படுத்தினேன்" என்றார்கள். 2-வது காரியம்: நான் கொன்றனே அந்தப்பையனின் தாய் தந்தையர் முஸ்லீமானவர்கள்; அவன் காபிர்; அவனின் காரணத்தால் அவர்களிருவரும் காபிராகிப், போவார்களென்று பயந்து நான் அவனைக்கொன்று விட்டேன்; ஏனெனில், அல்லாகுதஆலா

அவர்களுக்கு அவனைவிட அதிக கிருபையுள்ள பிள்ளையை நன்கொடையாகக் கொடுப்பதை நாடி இப்படிச்செய்தேன் என்றார்கள்.

ரிவாயத்து: ஸஹீஹுல் புகாரி ஸஹீஹுல் முஸ்லீம் என்ற இருகிதாபிலும், வுபையிபுனுக அபூறவியல்லாகு அன்குவைத் தொட்டும் ரிவாயத்து செய்யப்பட்டிருக்கிறது: நாயகம் றசூல் சல்லல்லாகு அலைகிவசல்லம் திருவுளமானார்கள்: "கிலுரு அலைகிஸ்ஸலாம் கொன்றார்களே அந்தப் பையனாகிறவன், குபுராத் தெரிந்து கொள்வானென்றும், அவனின் ஒடுக்கம் குபுரைக்கொண்டு தான் முடியுமென்றும் தக்திரில் எழுதப்பட்டிருந்தது" என்று.

இன்னுமொரு ஹதீஸில் வருகிறதாவது? "நாயகம் றசூல் சல்லல்லாகு அலைகிவசல்லம் திருவுளமானார்கள்: அந்தப் பையன் ஹயாத்தாக இருந்தானேயானால் அவன் தாய் தந்தை இருவரும் அவனை உகந்ததற்காக வேண்டியே அவனைத் தொடர்ந்து காபிராகி விடுவார்கள்" என்று.

ரிவாயத்து: "அந்தப்பையனுக்குப் பிறகு அவனின் தாய்தந்தையர்களுக்கு அல்லாகுதஆலா ஒருபெண்குழந்தையை நன்கொடையாகக்கொடுத்தான் அதை ஒரு நபி நிகாகு செய்து அதில் நின்றும் ஒரு நபி பிறந்தனர் அந்த நபியைக்கொண்டு ஒருஉம்மத்து,நேர்வழி பெற்றார்கள்" என்று.

3-வதுகாரியம்:- "நான் நிலைநிறுத்திய சுவராகிறது இரண்டு எதீமான குழந்தைகளுக்குடையது; அதின் கீழ் அவ்விருவர்களுக்கும் சிலபுதையல்கள் வைக்கப்பட்டிருந்தன அவர்களின் தகப்பனார் சாலிஹான மனிதராகஇருந்தார். அதற்காகத்தான் உம்முடைய நாயன் அக்குழந்தைகள் சரியாக வாலிபபிராயத்தை அடைந்து தங்களுடைய புதையலை எடுத்துக்கொள்ள நாடி அவர்கள்பேரில் இவ்வாறு கிருபைசெய்தான்" என்று சொன்னார்கள்.

அதன்மேல் அவர்கள் மூசாவை நோக்கி, "ஆய்மூசாவே' நான் இந்த மூன்று காரியத்தையும் என்னுடைய யோசனையாகச் செய்யவில்லை; அல்லாகுதஆலாவுடைய உத்திரவுகொண்டுதான்செய்தேன்; என்கினும் நீர் அதின்பேரில் சபுருசெய்ய சக்திபெற்றீர் இல்லை" என்று சொன்னார்கள்.

ரிவாயத்து: வுஸ்மான் றவியல்லாகு அன்குசொன்னார்கள் அச்சுவற்றின்கீழ் இருந்தபுதையலாகிறது தங்கத்தில் நின்றுமுள்ள ஒரு பலகையாம் அதில் எழுவரிகள் எழுதப்பட்டிருந்தது ஒருவதுவரி

ஒருவன் மவுத்தை அறிந்து சிரிக்கிறானே அவ்வொருவனுக்கே நான் புதுமையாகிறேன் இரண்டாவது வரியில் ஒருவன் துன்யாவைப் பழுவென்று அறிந்து அதில் வேள் வெள்கையாகிறானே அவ்வொருவனுக்கேநான்புதுமயாகிறேன். மூன்றாவது வரியில் கருமமடங்கலும் அல்லாகுதஆலாவின் (கலாகதுரு) கொண்டாகஇருக்குமென்று அறிந்துதப்பிவிட்டதை குறித்துகவலைகொள்கிறானே அவ்வொருவனுக்கே நான்புதுமையாகிறேன் நாலாவதுவரியில்ஒருவன் கியாமத்துநாளின் கேள்விகணக்கை அறிந்து நல்ல அமல் செய்யாமல் பணம் காசு திரவியங்களை சேகரம்செய்து வருகிறானே அவ்வொருவனுக்கே நான் புதுமயாகிறேன் ஐந்தாவதுவரியில் ஒருவன் நரகத்தைஅறிந்துபாவதோஷங்களை செய்து வருகிறானே அவ்வொருவனுக்கே நான் புதுமையாகிறேன் ஆறாவது வரியில் ஒருவன் அல்லாகு தஆலாவைஉண்மையாக அறிந்து அவனல்லாதவனைகொண்டுதிக்ருசெய்கிறானே அவ்வொருவனுக்கே நான் புதுமையாகிறேன். ஏழாவது வரியில் ஒருவன் சொர்க்கத்தை உண்மையாக அறிந்து துன்யாவைகொண்டுருகத்துதேடுகிறான் இன்னும் ஷெய்த்தானை பகையனென்று அறிந்து அவனுக்கு வழிப்படுகிறானே அவ்வொருவனுக்கே நான் புதுமையாகிறேன் என்று அப்பலகையில் எழுதப்பட்டிருந்ததாம் இன்னும்தப்ஸீரு மஆலிமுத்தன்ஸீலில் வருகிறது அப்பலகையின் மற்றொருபக்கத்தில் இவ்வாறு எழுதப்பட்டிருந்தது அதின்பொருள்.

யெஅனீ நான் அல்லாகுதஆலாவாக யிருக்கும் என்னைத்தவிர வணக்கத்திற்குபாத்திரவான் யாருமில்லை. நான் தனித்தவன் எனக்கு இணை துணை யாதொன்றுமில்லை .நான் நலமையும் தீங்கையும் படைத்தேன் ஒருவன் அவனை கைறளகில் படைத்தானே அவ்வொருவனுக்கேசுபசோபனம் என்று எழுதப்பட்டிருந்தது இமாம்ஜ அபரிபுனி முஹம்மத் ரஹீமஹுல்லாஹு சொன்னார்கள் அந்தசாலிஹான தகப்பனென்றது அக்குழந்தைகளின் ஏழாவது பாட்டனார் அவர்தான் அப்புதையலை புதைத்துவைத்தவர் அவரின் சாலிஹுதனத்தின் பொருட்டால் அவ்விருவர்களுடையமூதலையும் நப்ஸையும் காக்கப்பட்டது.

ரிவாயத்து: முஹம்மதுப்னுல் முன்கதிருசொன்னார்கள் அல்லாகுதஆலாவாகிறவன், ஒரு சாலிஹாகிய அடிமையுடைய சாலிஹுதனத்தைக்கொண்டு அவனின் பிள்ளையையும் அவனுடைய பிள்ளையுடைய பிள்ளையையும் அவனின் கூட்ட குடும்பத்துகளையும் அவனிருந்த கோணங்களையும் அவனைசுற்றி இருக்கும்வீடுகளையும் காக்கப்பட்டு

அன்னவர்கள் நீங்காமல் அல்லாகு:தஆலாவுடைய காவலிலிருப்பார்கள் என்று இன்னும் ஹயாதுல் ஹயவான் என்ற கிதாபில் சுலைஹலீரவியல்லாது அவர்களைக் குறித்தும் வந்திருக்கிறது என்னவெனில் மூசா அலைகிஸ்ஸலாமும் கிலுரு அலைகிஸ்ஸலாமும் பிரிகிறதை நாடியபோது கிலுரு அலைகிஸ்ஸலாம் அவர்களைப்பார்த்து ஆய்மூசாவே! நீர் என்னுடன் சபூருசெய்து இருந்திரானால் ஆயிரக்கணக்கான ஆச்சரியமுற்ற விநோதங்களை காண்பித்து கொடுப்பேன் அது ஒவ்வொன்றும் இப்போது நீர்பார்த்ததைவிட மெத்த புதுமையாக இருக்குமென்றுசொல்லவும் மூசா அலைகிஸ்ஸலாம் அவர்களை பிரிகிறதினால் மனமுரிந்து அழுதவர்களாகசொன்னார்கள் அல்லாவுடைய நபியே நீங்கள் எனக்கு ஏதேனும் வசிய்யத்துசெய்யுங்களென்று சொல்ல கிலுரு அலைகிஸ்ஸலாம் சொன்னதாவது: ஆய் மூசாவே! நீர் உம்முடைய ஹிம்மத்தை மீளும் தலமாகிய ஆகிரத்துக்கு நல்ல இபாதத்து செய்கிறதை தெரிந்துகொள்ளும் இன்னும் எந்த ஒருவஸ்து உமக்கு பிரயோஜனத்தைகொடுக்கவில்லையோ அதனருகில் திரும்பிப்பாராமல் அச்சம்தீர்ந்து இருக்கிறவேளையில் பயத்தைவிட்டுவிடாமல் பயங்கொண்டு இருக்கிறவேளையில் ஆசைமுரிந்தவராக ஆகாதீர் இன்னும் உமது எந்தவேலையிலும் கலந்து ஆலோசனை செய்யும். இன்னும் உமக்கு எந்தமட்டுக்கும் சக்தி இருந்தனவோ அதுவரையிலும் யாருக்காவது இஹ்சான் என்னும் உபகாரத்தை செய்வதைவிட்டு விடாதையும் என்றுசொல்லி முடிக்க திரும்பவும் மூசா அலைகிஸ்ஸலாம் அவர்களிடத்தில்இன்னும்எனக்குவசிய்யத்து செய்யுங்கள் என்று சொன்னபோது கிலுரு அலைகிஸ்ஸலாம் சொன்னார்கள் ஆய் மூசாவே! நீர் யாரிடமும் ஒருபோதும் வம்பு வழக்கு செய்யாதீர் எந்த இடத்திற்கும் அவசியமன்றி போகாதீர் ஆச்சரியமற்ற காரியங்களை தொட்டு சிரியாதீர் ஆய் இம்ரானுடைய குமாரரே! நீர் பாவிகளைப்பற்றி அவர்கள் பாவம் செய்துவிட்டு அதின் பேரில் கைசேதம் கொண்டபிறகு அவர்களின் பாவ தோஷத்தைக் குறித்து வின்னம் பேசாதீரென்று சொல்லவும் மூசா அலைகிஸ்ஸலாம் சொன்னார்கள். ஆய் கிலுரே! நீங்கள் எனக்கு நல்ல வசிய்யத்து செய்தீர்கள். ஆதலால் அல்லாகுதஆலா உங்கள்பேரில் அவனுடைய நிஅமத்துகளை நிரப்பமாக்கி இன்னும் உங்கள் வாழ்நாளை அவனுடைய இபாதத்திலே திருப்பி அவனின்பகையவனை விட்டுக் காத்துக் கொள்வானென்று சொல்லி முடிக்கவும். கிலுரு அலைகிஸ்ஸலாம் அவர்கள் மூசா அலைகிஸ்ஸலாமை நோக்கி நீங்கள் எனக்கு

லாமைப்பார்த்து 'இப்போது நீர் எனக்கு வசியத்து செய்யுமென்
ருர்கள். அப்போது அவர்கள் 'அய்கிலுறே! நீங்கள் அல்லாகுத்த
ஆலா உடைய கருமத்திலே அல்லாது கோபம் கொள்கிறதை நான்
உங்களுக்கு அச்சம் பூட்டுகிறேன். நீங்கள் துன்யாவை முஹப்பத்து
வைக்காதீர்கள். ஏனெனில் அதுசமானே போக்கிருபுரில் கொண்டுவந்
துதள்ளிவிடும், என்றுவசியத்து செய்யவும், கிலுரு அலைகிஸ்ஸலாம்
'அய்மூசாவே! நீர் எனக்கு மிக்க கட்டப்பான வசியத்தைக் கொண்டு
வசியத்து செய்தீர்,' என்றுசொன்னார்கள். பின் இருவர்களும்
ஒருவர்க்கொருவர் துஆ கேட்டவர்களாகப் பிரிந்தார்கள்.

## 9-வது பஸல். நாயகம் கிலுரு அலைகிஸ்ஸலாம் தங்கள் நப்ஸை அல்லாவுக்காக விற்றதில் பேசம்பிரிவு.

முஸ்லிம் கபீருஎன்றகிதாபில் இமாம்தபுறுனி,றஹீமகுல்லா அபீ
வுமாமா,றலியல்லாகுனைத்தொட்டும்ரிவாயத்துசெய்திருக்கிருர்கள்:
என்னவெனில்,நாயகம்றசூல் சல்லல்லாகு அலைகிவசல்லாம் அவர்கள்
சஹாபாக்களை நோக்கி, நான் உங்களுக்கு கிலுரு அலைகிஸ்ஸலாமு
டைய நடபாகத்தைப்பற்றிச்சொல்லவா என்றபோது, சஹாபாக்கள்
ஆம்சொல்லுங்களென்ருர்கள். அப்பொழுது நாயகம் றசூல்சல்லல்
லாகு அலைகிவசல்லம் திருவுளம்பற்றிஞர்கள்: ஒருநாள் கிலுரு
அலைகிஸ்ஸலாம் பனீஇஸ்ருயீல்களுடைய கடைவீதியில் போகும்
போது திடீரென்று உரிமைச்சீட்டுஎழுதிக்கொடுக்கப்பட்டபகீரொரு
வன் அவர்களைப்பார்த்து உங்களுக்கு அல்லாகு தஆலா பறக்கத்தை
கொடுப்பான்; தாங்கள் எனக்கு ஏதேனும் கொடுங்களென்ருன்.
அதற்குக்கொடுக்கஎன்னிடம் யாதொன்றும்கிடையாதுஎன்றுகிலுரு
சொல்ல அவன்திரும்பவும் அவர்களிடம்(லிவஜ்ஹில்லா) யஅனீ அல்
லாவுக்காக வேண்டியேனும் கொடுங்கள்; நான் உங்களுடைய திரு
முகத்தில் இரக்கத்தைப்பார்க்கிறேன். இன்னும் நான்உங்களில் நின்
றுபறக்கத்தையும்ஆதரவுவைக்கிறேனென்ருன். அப்போது கிலுரு
அலைகிஸ்ஸலாம் என்னிடம் யாதொன்றுமில்லை.ஆகிலும் நீஎன்னுடன்
நடந்துவாரும் என்றுசொல்லிப் போகிறபோது அவர்கள் பகீரே
நீர்என்னைவிற்றுப்போடுமென்றுசொல்லவும்,அவன் இதென்னவேலை;
இது நடக்கக்கூடிய காரியமாவென்று சொல்ல,அதற்கு கிலுரு
அலைகிஸ்ஸலாம் ஆய்பகீரே! நீ என்னிடத்தில் மெத்த வலுப்ப
மான காரியத்தைக்கொண்டு சுவால்செய்தாய்; அதாவது(லிவஜ்ஹில்

லா) யெஅனி அல்லாவுக்காக வேண்டிகொடுமென்று கேட்டுவிட்டாய்நான் உன்னிடம் அன்பில்லாதவனாக ஆகமாட்டேன். ஆனதினால் நீ என்னை விற்றுப்போடுஎன்றார்கள், பின்னர் பகீரு அவர்களைப்பிடித்து கடைவீதிக்குகொண்டுவந்து ஒருமனிதனிடம் நானூறு திரகத்துக்குவிற்றுப்போட்டு அந்த பகீர்போய்விட்டான். பிறகு கிளுரு அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தம்மைவாங்கின மனிதனிடத்தில் சிலகாலம் சும்மா இருந்தார்கள். அம்மனிதன் அவர்களிடத்தில் யாதொரு வேலையும் வாங்கவில்லை; பின்பு அவர்களே அம்மனிதனிடத்தில், 'ஆய்மனிதனே! நீர் என்னை வேலை கொள்வதற்காக வேண்டி வாங்கினீர்; அப்படியிருக்க நீர் எனக்கு வேலை கொடுக்காமலிருக்கிறீர்; ஏதாகிலும் ஒருவேலை செய்யும்படி கட்டளை இடும்' என்று சொல்ல, அவர், 'நான் உமக்கு வருத்தத்தைக் கொடுக்க நாடவில்லை; ஏனெனில் நீர் வயது சென்ற மனிதராக இருக்கிறீர்' என்றார். அதற்கு கிளுரு அலைஹிஸ்ஸலாம், 'நீர் ஏவுகிற வேலை செய்ய எனக்கு யாதொரு கஷ்டமுமில்லை' யென்று சொல்ல, அவர், 'நல்லது நீர் இதோ அங்கு கிடக்கிறகல்லை எடுத்து இன்னவிடத்தில் கொண்டுபோய்ச் சேரும்' என்று அவர்களுக்குச் சொல்லிவிட்டு, அவர் ஏதோ ஒருவேலைக்குப் போய்விட்டார். இது நிற்க, அந்தக் கல்லோ பிரமாண்டமான ஒரு கல்லாக இருந்தது. அதை ஆறுமனிதர்கள் கூடிப் பகல் முழுவதும் தூக்கினால்தான் அக்கல்லைக்குறித்த இடத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கலாம். அப்படியிருக்க, அவர் திரும்பிவந்து பார்க்கையில் அந்தப் பாரியகல்லானது ஒருஸாஅத்து நேரத்திற்கெல்லாம் அவர் சொன்ன இடம்போய்ச் சேர்ந்திருந்தது. அதைக் கண்டு அவர், 'ஆய்மனிதனே! நான் உம்மைப்போல் ஒருவரையும் பார்க்கவில்லை; நீர் மெத்த வல்லமைசாலியாக இருக்கிறீர்' என்று அவர்களைப் புகழ்ந்து பேசினார். அப்பால் அந்த மனிதருக்கு ஏதோ ஒரு ஊருக்கு ஸபர் போக நேரிடவும், அவர் கிளுரு அலைஹிஸ்ஸலாமிடத்தில் 'ஆய் மனிதனே! நான் உம்மை விசுவாசமுடையவராகப் பெற்று கொண்டேன்; ஆகையால் நீர் என்னுடைய பெண்சாதிபிள்ளைகளைப் பாதுகாத்துக் கொள்ளும்' என்று சொல்ல, அவர்கள், 'நல்லது அவ்வாறே பாதுகாத்திருக்கிறேன்; அதனோடு நீர் ஏதாகிலும் எனக்கு ஒரு வேலையையும் கொடுத்துச் செல்லும்; நான் அதைச் செய்துகொண்டிருக்கிறேன்' என்று சொன்னார்கள். அப்போது அவர், 'நான் உமக்கு வேலையைக் கொடுத்து உம்மை வருத்தப்படுத்த நாடவில்லை' என்றார். அதற்கவர்கள், 'அவ்வேலைகள் செய்ய எனக்கு யாதொரு கஷ்

டமுமில்லை' என்று சொல்ல, அவர், 'நல்லது நான் போய்வருகிற வரையில் எனது வீட்டைக் கட்டுகிறதற்காகவேண்டி நீர் செங்கல்களை தயார் செய்யும்' என்று சொல்லிவிட்டு சபரில் போய்விட்டார். இதற்கிடையில் அவர்கள் செங்கல்களை தயாரித்து வீட்டையும கட்டி முடித்து விட்டார்கள். அப்பால் அம்மனிதன் சபரை விட்டு வீட்டுக்கு வரவும் வீடு கட்டப்பட்டிருக்கிறதைக் கண்ணுற்று அவர்களிடத்தில் 'ஆய்மனிதனே! நான் உம்மிடத்தில் உண்மையைக் கேட்கிறேன்- நீர்யார்? உம்முடைய நாமமென்ன? எனக்கு விவரமாகச் சொல்லு மென்றார். அப்போது கிலுறு அலைகிஸ்ஸலாம் ''ஆய்மனிதனே! நான் கிலுறு; என்னை (லிவஜ் ஹில்லா) என்னும் சொல்லானது அடிமைத்தனத்தில் ஆக்கிற்று. அதாவது நான் ஒருநாள் பனீ இஸ்ராயீல்களுடைய கடைவீதியில் போகும் போது உரிமைச்சீட்டு எழுதிக் கொடுக்கப்பட்ட பகீர் ஒருவன் என்னிடம் வந்து, 'ஏதாவது கொடு' மென்றான் அவனுக்குக் கொடுக்க எதுவும் என்னிடம் இல்லாமலிருந்தது. அதனால் நான் 'எதுவுமில்லை' யென்றேன்; திரும்பவும் அவன் என்னிடம், '(லிவஜ்ஹில்லா) பெஅனி! அல்லாவுக்காக எதுவும் கொடு' மென்றான். ஒருவனிடத்தில் (லிவஜ்ஹில்லா)வைக் கொண்டு சுவால் செய்யப்பட்டால் அவன் கேட்டவனுக்குக் கொடுக்க சக்தி பெற்றிருக்கிறான். அதனால் அவன் கேட்டதைக்கொடுக்காமல் ரத்து செய்வானாகில் அவனுடைய முகத்தில் சதையும்தோலுமில்லாதவனாக கியாமத்து நாளையில் அவனைக்கொண்டுவந்து நிற்பாட்டப்படும்; மேலும் அவன் எலும்புகளும்ஆடிக்கொண்டு இருக்கும்; அதனால் நான் இதற்குட்பட்டேன்', என்று சொன்னார்கள். இவ்வாறு சொல்லியதை அம்மனிதர் கேட்டுவிட்டு, 'அல்லாவுடைய நபியே! நான் தங்களை அறியாத்தன்மையால் வாங்கிவிட்டேன்' என்று சொல்ல, 'அதற்கவர்கள், அதனால் யாதொரு பாதகமுமில்லை; நீர் நன்மையான காரியம் செய்தீர்' என்றார்கள். பின்பு அவர், 'அல்லாவுடைய நபியே! என்னுடைய தாய் தந்தையர் தங்களுக்கு குருபானாக இருக்கிறார்கள்; ஆனதால் நான் செய்த குற்றத்துக்குத் தண்டனையாகத் தாங்கள் என்பேரிலும் என்குடும்பத்தார் பேரிலும் எதை ஹுக்கும் செய்கிறீர்களோ அதற்கு நான் உட்படுகிறேன்' என்று சொல்லி மேலும் அவர், 'தாங்கள் எனது கூட்ட குடும்பத்துடன் இருக்கிறீர்களா அல்லது என்னை விட்டுப் போக நாடுகிறீர்களா' என்று கேட்டார். அதற்கு அவர்கள், 'நான் போய் என் நாயனை இபாதத்து செய்ய நாடுகிறேன்' என்று சொல்

லவும். அவர் அவர்களுக்குப் பயணம்போக அனுமதி கொடுத்தார். அவர்கள் போகிறபோது, 'எல்லாப் புகழும் புகழ்ச்சியும் அல்லாஹுத்த ஆலாவுக்கே; அவன் எப்படிப்பட்டவனென்றால் என்னைத் தன்னுடைய வணக்கத்திற்குத் திரும்ப உதவிபுரிந்து அம்மனிதனிடமிருந்து விடுதலை செய்தான். இத்தன்மையான அந்நாயனுக்கே புகழும் துதியும்' என்று சொல்லிக் கொண்டு போய்விட்டார்கள்" என்று நபிநாயகம் அவர்கள் சொன்னார்கள்.

## 10-வது பசல்: நாயகம் கிழுரு அலைகிஸ்ஸலாம் உடையஹயாத்தின் திட்டத்தில் பேசம்பிரிவு.

இமாம் நவவி ரஹிமஹுல்லா சொல்கிறதாவது: கிழுரு அலைகிஸ்ஸலாம் ஹயாத்தாக இருக்கிறார்கள் என்பது தான் சஹீஹான சொல்லாக இருக்கும்; அதின்பேரில் மிகுந்த உலமாக்கள், சாலிஹீன்கள், ஸூபியாக்கள் ஒற்றுமையாகி விட்டார்கள். ஆனால் சிலர், அவர்கள் மவுத்தாகிவிட்டார்களென்று சொன்னதை, மிகுந்தவர்கள் ரத்து செய்திருக்கிறார்கள். இன்னும் 'பஸ்லுல் கிதாப்' என்ற கிதாபில் ஷெய்கு அலாவுத்தவுலா சம்னானி, கத்த ஸல்லாகு சிர்றகு சொல்லியிருக்கிறதாவது: யாராகிலுமொருவன் கிழுரு அலைகிஸ்ஸலாம் ஹயாத்தாக இருக்கிறார்களென்பதை இன்காரு செய்வானாகில் அது அவனுடைய அறியாத்தன்மையாகும் என்பதே. இவ்வாறு அவர்கள் சொல்லி கிழுரு அலைகிஸ்ஸலாம் அவர்களுடைய நடக்கைகளை விரிவாகவும் எழுதியிருக்கிறார்கள். இன்னும் ஷெய்கு அப்துல் ஹக்கில் முஹத்திஸ் திஹ்லவிய்யி ரஹிமஹுல்லா ஷர்ஹு ஸிப்ரிஸ்ஸ ஆதாத், தக்மீலுல் ஈமான், இவற்றிலும் மற்றதிலும் எழுதி இருக்கிறார்கள்: என்னவெனில், "கிழுரு அலைகிஸ்ஸலாம் அவர்கள் ஹஸரத் றசூல் சல்லல்லாகு அலைகிவசல்லமுடைய காலத்திலும், சஹாபாக்கள், தாபிஹீன்கள், தரீகாவின் மஷாயிக்கின்கள், காலத்திலும் ஹயாத்தாகவே இருந்து வருகிறார்கள் என்ற விஷயத்தில் அநேக அக்பார்களும் ஆதாருகளும் வந்திருக்கின்றன"

ரிவாயத்து: இப்னு ஷாஹீன் என்கிறவர்கள், ஹனீபு,றகிமகுல்லாவைத்தொட்டு ரிவாயத்து செய்திருக்கிறார்கள்: அதென்னவெனில், "நபிமார்களில் நாலுபேர்கள் ஹயாத்தாக இருக்கிறார்கள்; அவர்களில் இரண்டு பேர்கள் (அதாவது இத்ரீசு அலைகிஸ்ஸலாமும், ஈசா அலைகிஸ்ஸலாமும்) வானத்திலும், இரண்டுபேர்கள் (அதாவது:கிழுரு

அலைகிஸ்ஸலாமும், இல்யாசு அலைகிஸ்ஸலாமும்) பூமியிலும்; அதாவது: கிலுரு அலைகிஸ்ஸலாம் கடலிலும், இல்யாசு அலைகிஸ்ஸலாம் கரையிலுமாக இருந்து வருகிறார்கள்'' என்று

ரிவாயத்து: கிலுரு அலைகிஸ்ஸலாமும் இல்யாசு அலைகிஸ்ஸலாமும் அல்லாகுத்தஆலா இடத்தில் நாலாயிரம் வருஷமாக (பாத்திஹா) சூரத்தைப்படிக்கக் கேட்டார்கள். அவன் படித்துக் கொடுக்கவில்லை. பிறகு அவர்கள் மிகவும் கெஞ்சிக் கேட்டார்கள். அப்போது அல்லாகுத்தஆலா, 'நான் அதை முஹம்மது சல்லல்லாகு அலைகிவஸல்லமுடைய உம்மத்திற்காக வைத்திருக்கிறேன்; ஆனாலும் நீங்களிருவரும் (மாவுல் ஹயாத்தென்னும்) தண்ணீரைக் குடித்து எனது ஹபீபாகிய முஹம்மது சல்லல்லாகு அலைகிவஸல்லமவர்கள் வருகிறமட்டிலும் ஹயாத்தாக இருங்கள்' என்று சொன்னான். பிறகு அவர்கள் மாவுல் ஹயாத்தென்னும் தண்ணீரைக் குடித்துவிட்டு நபி நாயகம் சல்லல்லாகு அலைகிவஸல்லம் வருமளவும் இருந்து பின்னர் அவர்களிருவரும் நபி நாயகம் இடம் வந்தார்கள். வந்தபோது அவர்கள் அவ்விருவர்களுக்கும் பாத்திஹா சூரத்தைப் படித்துக் கொடுத்தார்கள். அப்போது அவ்விருவர்களும் நபி நாயகம் இடம் 'எங்களுடைய (நிஅமத்து) நிரம்பிவிட்டது; இனி எங்களுக்கு ஹயாத்து வேண்டியதில்லை' என்று சொல்லவும், 'நீங்கள் அப்படிச் செய்யாதீர்கள்; ஹயாத்தாகவே இருந்து என் உம்மத்துகளுக்கு நீங்கள் கடலிலும் கரையிலும் உதவியாக இருங்கள்', என்று நபி நாயகம் முஹம்மது முஸ்தபா றசூல் சல்லல்லாகு அலைகிவஸல்லம் சொன்னார்கள். சல்லல்லாகு அலைகிவ அலைகிமா, இன்னும் தப்ஸீரு பக்வியில், வருகிறது: கிலுரு அலைகிஸ்ஸலாமும், இல்யாசு அலைகிஸ்ஸலாமும் ரம்லான் மாதத்தில் (பைதுல் முகத்தஸ)வந்து நோம்புபிடித்து ஒவ்வொரு வருஷமும் ஹஜ்ஜிலும் வந்து சேர்கிறார்கள் றலியல்லாகு அன்குமா.

## 11-வது பஸல் நாயகம் கிலுரு அலைகிஸ்ஸலாமை ஸஹாபாக்களும் மற்றவர்களும், கண்டதில் பேசும் பிரிவு.

இஸாபா, வென்னும் கிதாபில் ஹாபிலு இபுனுஹஜர் அஸ்கலானீ றஹிமஹுல்லா எழுதி இருக்கிறதாவது: என்னவெனில், உமரிபுனு அவ்பு, றலியல்லாஹு அன்குவைத்தொட்டு ரிவாயத்து வந்திருக்கிறது. அவர்கள் சொல்லுகிறார்கள்: ஒருபோது நாயகம்

றசூல் சல்லல்லாகு அலைஹிவஸல்லமவர்கள் (மஸ்ஜிதில்) தொழுது கொண்டிருக்கும்போது மதிலுக்கப்புறமிருந்து திடீரென்று ஒருவர் கூப்பிட்டு, (அல்லாகும்மா அயின்னி அலாமா, யுன்ஜீனீ மிம்மா கப்பதனீ) 'ஆ எனது நாயகா! என்னை நீ பயக்கரமாக்கி வைத்தாயே; அவைகளைவிட்டு ஈடேற்றம் கொடுப்பதின்பேரிலெனக்கு உதவி செய்தருள்' என்று சொன்னார். அவ்வாறு வந்த சப்தத்தை நாயகம் சல்லல்லாகு அலைஹிவஸல்லம் கேட்டு, அவரை நோக்கி, 'ஆப்மனிதனே! இந்த துஆவுடன் இணங்கிய இதன் சகோதரியாயுள்ள வேறு துஆவைச் சேர்த்துச் சொல்லக்கூடாதா' வென்று சொல்ல, அதைக்கேட்டு அவர் (அல்லாகும்மர்ஸுக்னீ, தைக்கஸ் ஸாலிஹீன், இலாமாதைல்வகத்தஹூம்) 'ஆ எனது நாயனே! நீ எனக்கு உனது சாலிஹீன்களுடைய தௌக்கை தந்தருள்; இன்னும் நீ அவர்களை எக்காரியத்தளவில் ஆசையாக்கி வைத்தாயோ, அதனவில் எனக்கும் ஆசையைப் பூட்டியருள்' என்று சொல்லி முடிக்கவும், நபிநாயகமவர்கள், அனஸிபுனுமாலிக்கை நோக்கி, 'அனசே! நீர் அம்மனிதரிடம்போய் நாயகம் சல்லல்லாகு அலைஹிவஸல்லம் அவர்களுக்காக நீர் இறை பொறுக்கத்தேடுவீராம் என்று சொல்லுமென்றார்கள். அவர் போய்ச் சொல்லவும், அதற்கு அவர் 'அனசே! நீர் றசூல்நாயகமவர்களின் தூதரோ? அதின்பேரில் தரிப்பட்டவராயிரும்' என்று சொல்லி, மேலும் 'நீர் றசூல்சல்லல்லாகு அலைஹிவஸல்லமவர்களிடம்போய் அல்லாஹுத்தஆலா தங்களை மற்றும் நபிமார்களைவிட விசேஷமாக்கி வைத்தான்; எவ்வாறெனில், றமலான் மாதத்தை மற்றமாதங்களைவிட விசேஷமாக்கி வைத்ததுபோலாம். இன்னும் உங்களின் உம்மத்துகளை மற்றும் நபிமார்களின் உம்மத்துகளைவிட சங்கையாக்கி வைத்தான். எதுபோலெனில் ஜும்ஆ உடைய நாளை மற்றநாட்களைவிட சங்கையாக்கி வைத்ததுபோல் என்று சொன்னதாகச் சொல்லும் என்று சொல்லிமுடித்தார். இன்னும் அனசுறலியல்லாகு அன்குவைத் தொட்டுவந்த இந்த ஹதீசை இபுனு அசாகிற், தபுறானி, இபுனுஷாஹீன், தார்குத்னி இவர்களின் ரிவாயத்தில் வந்திருக்கிறது. என்னவெனில், எப்போது அனசு றலியல்லாகு அன்கு அவர்கள் அம்மனிதரிடம் பேசித் திரும்பினார்களோ அப்போது அன்னவர் இந்தத் துஆவைச் சொன்னார்கள். அதாவது: (அல்லாஹும்மஜ் அல்னீ, மின் ஹாதிஹில் உம்மதி) 'நாயனே! நீ என்னை நேர்வழிபெற்ற இந்த நபியுடைய உம்மத்தினின்று மாக்கிவிடு' என்று சொன்னபிரகாரமேதயாம். பின்பு

சஹாபாக்கள் போய்ப்பார்க்கையில் அவர்கள் கிலுரு அலைஹிஸ்ஸலாமாயிருந்தார்கள்.

ரிவாயத்து : இஸாபாவென்ற கிதாபில், அபூஅப்துல் றஹ்மான்சலமி, றஹிமகுல்லா தங்களுக்குரிய கிதாபில் பிலாலுல்கவாஸ்றலியல்லாகு அன்குவைத் தொட்டு எழுதி இருக்கிறதாவது யாதெனில், அவர்கள் ஒருபோது நான்பனீ இஸ்ராயீல்களின் காட்டிலிருக்கையில் திடீரென்று ஒருமனிதர் வெளியாகி என்னுடன் நடக்க ஆரம்பித்தார். அப்போது நான் ஆச்சரியமுற்றேன். உடனே ஆகாயத்தினின்று தோத்திரமின்றி ஒரு சத்தம் இவர்கள் கிலுறு அலைகிஸ்ஸலாமாயிருக்குமென்று வந்தது. அப்போது நான் அவர்களிடத்தில் அல்லாகு தஆலாவைக்கொண்டு சத்தியம் செய்து நீங்கள் யாராக இருக்குமென்று கேட்க, அதற்கு அவர்கள் நான் கிலுரென்று சொன்னார்கள். அப்போது நான் அவர்களிடம் இமாம் ஷாபியி றகிமகுல்லாவின் காரியத்தில் என்ன சொல்லுகிறீர்களென்று கேட்டதற்கு அவர் அப்தால்களாகிய அவுலியாக்களினின்று மாயிருக்கிறாரென்றார்கள். பிறகு இமாம்அஹமதிபுனுஹம்பலியவர்களில் என்ன சொல்லுகிறீர்களென்று கேட்க அவர் ஸித்திகீன்களினின்று முள்ளவராயிருக்கிறாரென்றார்கள். பின்பு பிஷறுல்ஹாபி, றகிமகுல்லாவில் என்ன சொல்லுகிறீர்களென்று கேட்க அவர்களுக்கு ஒருவரும் நிகரானவர்களல்லவென்று சொல்லிமுடித்தார்கள்.

ரிவாயத்து : அபூஜஉறமவர்கள் பிஷறுல் ஹாபி றகிமகுல்லாவைத் தொட்டு நகல் செய்திருக்கிறதென்னவெனில், அவர்கள் சொல்லுகிறார்கள்: எனக்கு ஒரு அறை இருந்தது. நான் எங்குபோனாலும் அதைப்பூட்டிவிட்டு அதன் திறவுகோலை என்கைவசமாக வைத்துக்கொள்ளுகிறவனாயிருந்தேன். இவ்வாறிருக்கையில் ஒருநாள் நான்வெளியே போய்வந்து கதவைத்திறந்துபார்க்கையில் அதில் ஒருவர் தொழுதவண்ணமாக இருப்பதைக்கண்டு பயந்தேன். இதற்கிடையில்அன்னவர்தொழுது பரூக்கொடுத்து என்னை நோக்கி 'ஆய்பிஷறுல்ஹாபியே! பயப்படாதீர்; நான் உம சகோதரர் அபுல்அப்பாஸ் கிலுரென்று சொன்னார்கள். அப்போது நான் அவர்களிடம் எதாகிலும் ஒரு துஆவைப் படித்துக்கொடுங்கள் என்று கேட்க இந்த துவாவை ஓதிவாருமென்று சொன்னார்கள். அதாவது (அஸ்தக்பிருல்லாகு மின்குல்லிஸன் பின் துப்துயின்

றூஹு, அம்மைத்து, இலாஹி, வ அஸ் அலுக துத்தௌபத) என்பதாம். இதை ஓதிவருவதில் அநேக காரியத்து உண்டாயிருக்கிறதென்று சொன்னார்கள்.

ரிவாயத்து: "இபுனு அசாகிர் றகிமகுல்லாகு சொல்லுகிறதென்னவெனில், "இமாம் அபூசர்ஆ, அவர்கள் தங்கள் வாலிபப்பிராயத்தில் தாடிக்கு மருதோன்றிச்சாயங்கட்டிய ஒரு மனிதரைக் கண்டார்கள். அப்போது அவர் அவ்வம்மனிதர் நோக்கி, 'நீர் எந்தப் பணக்காரன் வீட்டுவாசலிலும் போகாதீ'ரென்று சொல்லி விலக்கிவிட்டு அக்ஷணமே மறைந்துவிட்டனர். நான் அம்மனிதரை என் முதிய வயதிலும் அதேகாலத்திலிருக்கக் கண்டேன். அப்போது அன்னவர் என்னை நோக்கி, 'நான் உம்மைப்பணக்காரர் வீட்டுவாசலில் போகவேண்டாமென்று விலக்கவில்லையா?' என்று வினவ, நான் ஆமென்றேன். இவ்வாறு சொல்லித்திருப்புகிறதற்கிடையில் பூமி பிளந்து அவர் அதில் நுழைந்ததுபோலும் என் பார்வையை விட்டு மறைந்துவிட்டார். அப்போதுதான் அன்னவர் கிழுறு அலைஹிஸ்ஸலாமாயிருக்குமென்று எனக்கு தோன்றிற்று. அவர்கள் சொன்னது முதல் நான் எந்தப் பணக்காரன் வீட்டுவாசலிலும்போய் யாதொரு ஹாஜத்தையும் நாடுகிறதில்லை" யென்று சொல்லி முடித்தார்கள்.

ரிவாயத்து: இன்னும், ஜௌஹறுல் முஹஸ்ஸல் பீ மனாக்கிபி இமாம் அஹ்மதிப்னு ஹன்பல் என்ற கிதாபில் பக்தாதிதிகளில் நின்றுமொருவரைத் தொட்டும் நகல் செய்யப்பட்டிருக்கிறது. அவர் சொல்லுகிறார்: 'ஒருபோது நான் கப்பலேறி யாத்திரை செய்தவனாக ஒரு தீவுபோய்ச் சேர்ந்தேன். அங்கு தலையும் தாடியும் நரைத்த ஒரு மனிதன் உட்கார்ந்திருந்தார். அவருக்கு நான் ஸலாம் சொல்லவும் அவர் மறுமொழி சொல்லி என்னை நோக்கி 'நீர் பக்தாதுக்குப்போய்ச்சேர்ந்தால் இமாம் அஹ்மதிப்னு ஹம்பலி றகிமகுல்லாகுக்கு நமது ஸலாம் சொல்லி, நாம் சொல்லப்போவதை ஓதிக்காட்டும்; அதாவது: "(பஸ்பிர், இன்னவஃதல்லாகி அக்குன்) எஃனீ! நீர் சபூர் செய்யும் அல்லாகு தாலாவின் உறுதிவாக்கு உண்மை நிர்ணயமில்லாத ஜனங்கள் உம்மை எளிதாய் நினைக்கவேண்டாம்" என்பதேயாகும் என்று ஆயத்தைச்சொல்லி உடனே அவர் பார்வையைவிட்டு மறைந்து விட்டார். அப்போது நாங்கள் 'இவர்கள் கிழுறு அலைஹிஸ்ஸலாமாக இருக்கலாமென்று அறிந்து கொண்டோம்' என்றார்.

ரிவாயத்து: இமாம் ஃபக்றுனி றகிமகுல்லாஹ் கிதாபுத் தாஜுவில் அபூ அப்துல்லாஹிர்றகானீ என்பவர்களைத்தொட்டு நகல்செய்திருக்கிறதாவது

என்னவெனில், சுலைமானிப்னு அப்துல்மலிக் என்னு அரசர் ஒரு மனிதனை வெட்டுகிறதாகப் பயப்படுத்திவிட்டு அப்பால் வெட்டத் தேடும் சமயத்தில், அவன் எங்கேயோ மிரண்டோடி விட்டான். அதன்மேல் அவன் எங்கு போனாலும் அவனைத் தேடிப்பிடிக்க வேண்டுமென்று அவர் பிரயத்தனப்பட்டார். இச்சமாசாரத்தைக் கேள்விப்பட்டு அவன் மிகவும் கவலையுற்றவனாகித் துக்கத்தில் மூழ்கி தன் மனதில், 'நாம் இனிமேல் சுலைமானிப்னு அப்துல்மலிக் அரசரின் அதிகாரமில்லாத நாடுகளுக்கே போய்ச்சேர்ந்துவிடவேண்டும்' என்று எண்ணிக்கொண்டு கடைசியில், அம்மனிதன் மரம் மட்டை பயிரொன்றுமில்லாத மைதான வழியாய் நடந்துபோய் அங்கும் ஒருமனிதர் தொழுதுகொண்டிருந்ததைக்கண்டு பயந்து, 'நம்மிடம் ஏறுவாகனம் கட்டுச்சாதம் முதலிய சாமான் ஏதேனும் இல்லை; அப்படியிருக்க நமக்கென்ன பயம்' என்றெண்ணி அங்குத் தொழுது கொண்டிருந்தவரிடம் போனான். இதற்கிடையில் அன்னவர் தொழுகையைவிட்டுப் பராக்கொழிந்து அவனை நோக்கி, "ஆய்மனிதனே! சுலைமானிப்னு அப்துல்மலிக் உன்னை வெட்டுகிறதாகப் பயப்படுத்தினாரா" என்று கேட்க, அதற்கவன் ஆம் என்றான். பிறகு அவர்கள் அவனை நோக்கி, 'நீ இந்த ஏழுகலிமாவைப் பாடமிட்டுக்கொள்; இது உன்னைக் காப்பாற்றும்' என்று சொல்ல, அதற்கவன் 'அதைப் படித்துக்கொடுங்கள்; அல்லாகுத் தஆலா உங்களுக்கு றகுமத்துச் செய்வான்' என்று சொல்லி முடித்தான். பிறகு அவர்கள் அக்கலிமாக்களை அவனுக்குச் சொல்லிக்கொடுத்தார்கள். அவையாவன: (சுபுகானல் வாஹிதில்லதீ லெய்ஸ கைருஹூ இலாஹுன்) (சுபுகானல்கதீமில்லதீ லாபாதிய லஹு) (சுபுகானத்தாயமில்லதீலாநபாதலஹு) (சுபுகானல்லதீகுல்ல யவ்மின் ஹுவ பீஷான்) (சுபுகானல்லதீயுஹ்யி வயுமீத்து) (சுபுகானல்லதீகலகயானறு ஒமாலானறு) (சுபுகானல்லதீ அல்லம) (அல்லஷெயஇன், பிகைரிதஃலீம்) என்பவைகளாம். இவ்வேழு கலிமாக்களையும் அவன் அவர்களிடம் கேட்டு ஞாபகம் செய்து திரும்பிப்பார்ப்பதற்கிடையில் அவர்களைக் காணவில்லை. பின்பு அவன் 'அல்லாகுத்தாலா எனக்கு அச்சத்தீருதலைக்கொடுத்தான்' என்று தன் வீட்டைநாடி வருகையில் அவன்மனதில், 'நாம் சுலைமானிப்னு அப்துல்மலிக் வீட்டுவாசலுக்கே நேராய்ப் போகவேண்டும்' என்று ஒரு எண்ணம் உண்டாயிற்று. அப்படியே அவன் அங்குப் போகலானான். அந்நாளில் தடையின்றி அவரின் வீட்டுவாயிலில் புகுதலதற்கு எவருக்கும் உத்திரவு கொடுக்கப்பட்டிருந்தது. அதனால்

அவன் தடையின்றி அவர்முன் போனான், அப்போது அவர் தம் விரிப்பின்மீது படுத்துக்கொண்டிருந்தார். அவனை யவர் கண்டமாத்திரத்தில் கை ஜாடையாகக் கூப்பிட்டுத் தம் விரிப்பின்மீது அவனை யும் உட்காரும்படி செய்து, அவனை நோக்கி 'ஆப்மனிதனே! நீ என்பேரில் சூனியம் செய்துவிட்டாயா? அல்லது செய்யத்தான் வந்திருக்கிறாயா? நானே உன்னை வெட்டவேண்டுமென்ற எண்ணத்துடன் இருந்தும் இப்போது இவ்வாறு நானே உன்னைக் கூப்பிட்டு என் விரிப்பின் பேரில் உட்காரவைக்க நேரிட்டதின் காரணமென்ன? உண்மையாக விவரி' என்று கேட்டார். அந்த மனிதன் போனது வந்தது இடையில் நடந்தது முதலிய சமாசாரங்கள் யாவற்றையும் விவரித்துச் சொன்னான். அவற்றைக்கேட்டு சுலைமானிப்னு அப்துல்மலிக், தமது ராஜதானியிலிருக்கிற ஜனங்களை நோக்கி, "அல்லாகுதஆலாவின்பேரில் சத்தியமாகச் சொல்கிறேன்; இந்த மனிதன் கண்டானே அவர்கள் உண்மையாக கிழ்ருநபியாக இருப்பார்கள்" என்று சொல்லி, மேலும் அவர்களை நோக்கி, "நீங்கள் இம்மனிதனுக்கு கார்மானத்தின்சீட்டுக்கொடுத்து நமது தர்பாரினின்று வெகு,வெகு மதிகளையும் கொடுத்தனுப்புங்கள்" என்று கட்டளையிட்டார். அவ்வாறே அம்மனிதன் கொடுத்தனுப்பப்பட்டான்.

## 12-வது பசல்: நாயகம் கிழ்ரு அலைகிஸ்ஸலாம் அவர்கள் அவுலியாக்களுடன் சந்தித்ததில் பேசும் பிரிவு.

ஹிகாயத்து—1: தஸ்கிறதுல் அவ்லியாவில் சுல்தான் ஹலறத்து இபுறாஹீம் முப்னு அத்கம் றலியல்லாகு அன்குவின் நடப்பைப் பற்றி எழுதியிருக்கிறார்கள்: ஒருநாள் அவர்கள் தர்பாரில் ராஜாங்கத்திற்கு அதிகாரமுடையவர்கள் எல்லாம் வந்து நிற்கும்போது திடீரென்று ஒரு மனிதர், தர்பாருக்கு நேராக சிம்மாதனத்துக்கருகில் வந்து நின்றார். அப்போது ஒருவராலும் அவரை வருகிறதை விட்டுத் தடுக்க முடிந்ததில்லை. அப்போது இபுறாகீமுப்னு அத்கம் றலியல்லாகு அன்கு அவர்கள் அவரைநோக்கி, 'ஆப் மனிதனே! நீர் இங்கு எதை நாடி வந்தீர்?' என்று கேட்கவும், அவர் 'இந்த சத்திரத்தில் தங்கலாமென்று வந்தேன்' என்றார். அப்போது அவர்கள் அவரைநோக்கி, 'இது சத்திரமில்லை; என்னுடைய வீடாக இருக்கும்' என்று சொல்ல, அவர் அவர்களிடம் 'இதற்கு முன்னால் இது யாருடைய வீடு' என்று கேட்க, அவர்கள் என் தகப்பனார்

வீடென்றார்கள். அதற்கவர், அதற்கு முன்னால் அது யார்வீடென்று கேட்க அவர்கள் என் பாட்டனார் வீடென்றார்கள். அப்போது அவர், அவர்களெல்லாம் எங்கே போனார்கள் என்று கேட்டார். அதற்கவர்கள் மவுத்தாகி விட்டார்கள் என்று சொல்லவும் அவர் அப்படியானால் இது சத்திரமாச்சுது; ஏனெனில் இதில் ஒருவன் வருகிறான் மற்றொருவன் போகிறான் என்று சொல்லிவிட்டு வெளியில் போய்விட்டார். அப்போது இபுறாகீமுப்னு அத்கம் றலியல்லாகு அன்கு அவரைப் பின்தொடர்ந்துபோய், அவரிடத்தில் நீர் யார்? எனது அகத்தில் ஆசையென்னும் நெருப்பை மூட்டிவிட்டீரே என்று சொல்லவும், அவர்கள் நான் கிலுறாயிருக்குமென்று சொன்னார்கள். இன்னுமொரு ரிவாயத்தில் வருகிறது: இபுறாகீமுப்னு அத்கம் றலியல்லாகு அன்கு அவர்களைத் தொடர்ந்து முத்தவழியில் போகிறபோது பெரிய மனிதர் ஒருவர்வந்து அவர்களுக்கு (இஸ்முல் அஃலமை) படித்துக் கொடுத்துவிட்டுப் போய்விட்டார்கள். பிறகு அவர்கள் அதைக்கொண்டு அல்லாகுதஆலாவினிடத்தில் வஸீலா தேடினவர்களாயிருக்கையில் திரும்பவும் அவர்கள் கிலுறு அலைகிஸ்ஸலாமை கண்டார்கள். அப்போது அவர்கள் சொன்னதாவது: ஆப் இபுறாகீமே! உமக்கு இஸ்முல் அஃலமை படித்துத்தந்தது என்சகோதரர் இல்யாஸ் அலைகிஸ்ஸலாமாக இருக்குமென்று சொன்னார்கள். இருவர்களுக்கிடையில் மிகுந்த பேச்சுகள் நடந்துகொண்டிருந்தன. மேலும் அவர்களுக்கு ஷெய்கு, கிலுறு அலைகிஸ்ஸலாமாக இருக்கும். அவர்கள் தான்சுல்தான ராஜாங்கத்தைவிட்டு ஒழிக்கக் காரணமாகவிருந்தது அல்லாகு தஆலாவுடைய பாதையில் வேட்கையாக்கி வைத்தார்கள்.

## ஹிக்காயத்து-2.

தஸ்கிறதுல் அவுலியாவில் வருகிறது: ஒரு மனிதன்ஹஸ்றத்து நாயகம் அபாயஸீதுல் புஸ்தாமி றலியல்லாகு அன்கு சமூகத்தில் வந்து சொன்னான்: நான் தங்களை தபுறுஸ்தான் என்னும் ஊரில் இன்ன மனிதருடைய ஜனாஸாதொழுகையில் பார்த்தேன். தாங்கள் கிலுறு அலைகிஸ்ஸலாமுடைய கையைப்பிடித்துக்கொண்டிருந்தீர்கள். தொழுகை முடிந்தவுடன் ஆகாயத்திற் பறந்திட்டீர்களென்று சொல்லவும், அவர்கள் நீர் உண்மையைச் சொன்னீர் என்று சொன்னார்கள். றலியல்லாகு அன்கு.

## ஹிக்காயத்து-3.

அஹ்மது ஹவாரீகத்தஸல்லாகு ஸிர்றகு சொல்லுகிறார்கள்:
இபுனு ஸம்மாக் றஹிமகுல்லாவுக்கு ஸவுக்கியமில்லாமலிருக்கிற
போது நான் அவர்களுடைய நீரை எடுத்துக்கொண்டு யஹூதியா
கிய பரிகாரனிடத்தில் போனேன். போகையில் இடைவழியில்
நூரணியத்துடைய ஒரு வாலிபரைக்கண்டேன். அவர் அழகியதுப்
தான உடையை அணிந்திருந்தார். அவரில் நின்று பரிமளவாசனை
கள் கமழ்ந்தன. அவர் என்னைப்பார்த்து நீர் எங்கேபோகிறீரென்று
கேட்டார். நான் இபுனு ஸம்மாக் றஹிமகுல்லாவுடைய காரூராவை
எடுத்துக்கொண்டு வைத்தியனிடத்தில் போகிறேனென்று சொல்ல
வும், அவர் சொன்னார்: (ஸுப்ஹானல்லா) ஆச்சரியம்! என்னவெ
னில் அல்லாகுதஆலாவின் தோழர்களுக்காக வேண்டி அவனுடைய
பகையனானவனின் நின்று உதவியை நாடுகிறீர்களோ? திரும்பிப்
போய் அவர்களுக்குச் சொல்லும். எங்கு வருத்தமாக இருக்கின்ற
தோ அங்கு கையை வைத்து "(அவூதாபில்லா ஹிமினஷ் ஷயதானிர்ற
ஜீம் வபில் ஹக்கினஸல்னாகு வபில்ஹக்கினஸல்)" என்ற ஆயத்தை
ஓதவும் என்று சொன்னார்கள். பின்னர் நான் திரும்பிவந்து இபுனு
ஸம்மாக் றகிமகுல்லாகு அவர்களிடத்தில் நடந்த சமாசாரத்தைச்
சொல்லவும் அவர்கள் அப்படியே செய்ய அதேவக்தில் அவர்களுக்
கு ஸவுக்கியமும் ஆரோக்கியமும் உண்டாயின. பிறகு இபுனுஸம்
மாக் றகிமகுல்லாகு அவர்கள் என்னிடத்தில் நீர் அம்மனிதரை
அறிவீரா என்று கேட்டதற்கு நான் அறியேனென்று சொன்னே
ன். அவர்கள் கிஹுரு அலைகிஸ்ஸலாமாக இருக்குமென்று சொன்
னார்கள். ரலியல்லாகு அன்கு.

## ஹிக்காயத்து-4.

ஹகீம் திர்மதி என்கிறவர்கள் ஒருநாள் தாங்கள் கோர்வை
செய்த கிதாபுகளெல்லாம் தண்ணீரில் கொண்டுவந்து போட்டிடவும்
கிஹுரு அலைகிஸ்ஸலாம்வந்து அவைகளை எடுத்துக்கொண்டுவந்து
அவர்கள்வசம் ஒப்பித்துவிட்டு அவர்கள் சொன்னதாவது:நீர்கிதாபு
கோர்வைசெய்வதின்பேரிலேயே பராக்காக இருமென்று சொல்லி
விட்டுப் போய்விட்டார்கள். பின்பு அவர்கள்சிலகாலம்வரையில்கிஹு
ரு அலைகிஸ்ஸலாமைப் பாராதவர்களாயிருந்தார்கள். அப்படி இருக்
கும்காலத்தில் ஏதோ ஒரு வெள்ளாட்டி ஒரு பையனுடைய றஜீஸா

ஊட்டையைத் தலைத்தூக்கொண்டிருந்தாள். அங்கு நஜீஸா கிரப்பிய தண்ணீரும் மூத்திரமும் ஒரு படிக்கத்திலிருந்தது. கிழுரு அலைகிஸ்ஸலாம் வெண்மையான ஆடையை அணிந்தவர்களாக அந்த திசையாய் வந்தபோது அவ்வெள்ளாட்டியானவள் கோபத்தில் அந்த நஜீஸான படிக்கத்திலுள்ள தண்ணீரை அவர்கள்பேரில் ஊற்றிவிட்டாள். அவர்கள் அதின்பேரில் சபூர்செய்துகொண்டு அதே வக்தில் ஹகிம் திர்மதீ றகிமகுல்லாகுவிடம் வந்து அவர்களுக்கு இடையில் நடந்த சமாசாரங்களைத் தெரியப்படுத்திவிட்டுப் போனார்கள். ரலியல்லாகு அன்கு.

## ஹிக்காயத்து-5.

அஸ்றூருல்பாத்திகா என்ற கிதாபில் வருகிறது: கிழுரு அலைகிஸ்ஸலாம் சொல்லுகிறார்கள்: நான் ஒருநாள் மன்சூரிப்னு அம்மார் றலியல்லாகு அன்குவின் மஜ்லிஸுக்குப்போயிருந்தேன்; அதிலொரு வாலிபர் மையத்தாக விழுந்து கிடந்தார். அப்போது நான் அங்கிருப்பவர்களிடம் அவரைக் குறித்துக்கேட்டேன். அவர்கள் சொன்னதாவது: ஒரு மனிதன் இந்த மஜ்லிஸில்(அல்லாகு அல்லா) என்று ஒரு சத்தம்போட்டார். இம்மேன்மையாகிய திருநாமத்தைக் கேட்டவுடன் அவருடைய றூகு போயிற்று என்று சொன்னார்கள்: பின்னர் கிழுரு அலைகிஸ்ஸலாம் சொல்லுகிறார்கள்: நான் இரவில் நித்திரை செய்யும்போது அவ்வாலிபரைக் கனவில் தரிசித்து அவருடைய ஹாலைக்குறித்துக் கேட்டபோது அவர் சொன்னதாவது, அல்லாகுத ஆலா எனக்கு ஷஹீதுடைய தர்ஜாவைவிட மேலான தர்ஜாவைக் கொடுத்தான் என்று சொன்னார். அப்போது அதின்காரணம் என்னவென்று கேட்க அதற்கவர் ஷஹீதுகள் குபாருகளுடைய வாளைக் கொண்டு வெட்டப்பட்டிருக்கிறார்கள். நானோ ஜப்பாராகிய அல்லாகுத்த ஆலாவுடைய வாளைக்கொண்டு வெட்டப்பட்டேன் என்று சொன்னார் என்பதாய்ச் சொன்னார்கள். றலியல்லாகு அன்கு.

## ஹிக்காயத்து-6.

இன்னும் அதில் ரிவாயத்து செய்யப்பட்டிருக்கிறது: கிழுரு அலைகிஸ்ஸலாம் அவர்கள் சொல்லுகிறார்கள்: நான் ஒரு மைதானத்தில் போகும்போது அங்கு கருப்பாகிய ஒரு மனிதன் விழுந்துகிடந்துகொண்டு பலதடவையாக (அல்லாகு அல்லாகு) வென்றுசொல்லி

ஹூஷார் இழந்தவராய் ஆகிவிட்டார். எப்போது அவருக்கு ஹூஷார் நீங்கினதோ அப்போது அவருடைய நிறம் மாறி வெண்மை வந்து விடுகிறது. தெளிவுபெற்றாரானால் வழக்கப்படியேகருப்பாகி விடுகிறார். அப்படியே அவரின் நிறம் மாறிக்கொண்டே வருகிறது. அப்போது நான் அவரிடத்தில் ஆய் பகீரே! உமதின் ஹாலென்ன வென்று கேட்டேன். அப்போது அவர் புன்சிரிப்பு சிரித்தவராய் என்னைநோக்கி ஆய்கினுமே நீர் அறியமாட்டீரா? அவனுடைய திரு நாமத்துடன் கருப்பு நிறகாகின்றது உமக்குத் தெரியாதாவென்று சொன்னார் என்று (ரலியல்லாகு அன்கு)

ஹிக்காயத்து-7.

இபுராகிமுல் கவ்வாஸ் றலியல்லாகு அன்கு சொல்லுகிறார்கள்: நான் என்னுடைய யாத்திரைகளில் சிலவற்றில் காட்டில் எனக்குத் தாகம் உண்டாகி தாகத்தின் கொடூரத்தால் மயங்கிக் கீழேவிழுந்தேன். அப்போது ஒருவரால் தண்ணீர் கொண்டுவந்து என் முகத்தில் தெளிக்கப்பட்டது. நான் விழித்துப்பார்க்கையில் முகம் அழகான ஒரு மனிதர் வாகனத்தில் இருந்து எனக்குத் தண்ணீர் கொடுத்துவிட்டு என்னை தமக்குப்பின்னால் ஏறி உட்காரும்படி சொன்னார். அப்போது நான் அதில் ஏறிக்கொஞ்சதூரம் போவதற்குள் அவர் என்னைப்பார்த்து 'இப்போது எதைநீர் பார்க்கிறீர்' என்றார். நான் 'மதீனாவைப் பார்க்கிறேன்' என்றேன். அப்போது அவர், என்னை நோக்கி, 'நீர் கீழேயிறங்கிப்போய் றசூல் சல்லல்லாகு அலைகிவஸலாமுக்கு சலாம்சொல்லி விட்டு, உங்களுடைய உடன்பிறந்தார் கிஜுரு தங்களுக்குச் சலாம்சொன்னாரென்று சொல்லும்' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்கள்: (றலியல்லாகு அன்குமா)

ஹிக்காயத்து-8.

கிஜுரு அலைகிஸ்ஸலாம் அவர்களைத் தொட்டும்பேசப்படுகிறது: அவர்களிடத்தில் நீங்கள் உங்கள் ஹயாத்தில்கண்ட கருமத்தில் மெத்த ஆச்சரியமானதைத் தொட்டும் சொல்லுங்கள் என்று கேட்டதற்குஅவர்கள்சொன்னார்கள்: நான்கண்டதில்மெத்தப்புதுமையானதாகிறது, ஒருபோது நான் பாரிய வனாந்தரக்காட்டில் நடந்துபோனேன்; அதின்பிறகு நான் அந்தக்காட்டைவிட்டு ஐந்நூறு வருடக்காலம் மறைந்திருந்தேன். பிறகு அந்தக் காட்டுக்கு மறுபடியும் போனேன். அந்தக்காடு பிரமாண்டமான பட்டணமாகி அதில்

அநேக ஆலா விருக்ஷங்களும், ஆறுகளும் உண்டாயிருந்தன. அப்போது நான் அந்த ஊரில் கண்டவர்களில் ஒருவரிடத்தில் இந்தப் பட்டணமுண்டாகி எவ்வளவுகாலம் இருக்குமென்று கேட்டேன்; அப்போது அவர் சொன்னதாவது: (சுபுஹானல்லா) நாங்களும் எங்கள் தகப்பனார் பாட்டனார்களும் இப்பட்டணத்தை இந்நிலத்திலேயே அறிந்திருக்கிறோமென்றார். அப்பால் நான் அப்பட்டணத்தைவிட்டும் ஐந்நூறு வருடகாலம் மறைந்து இருந்துவிட்டுப் பிறகு அப்பட்டணத்திற்குப் போனேன். அப்போது அது கடலாகவிருந்தது. அதில் ஒரு ஓடக்காரனைக் கண்டு நான் அவனிடத்தில் ஆப் மனிதனே! இவ்விடத்தில் உண்டாயிருந்த பட்டணம் எங்கேயென்று கேட்டேன். அதற்கு அவன் (சுபுஹானல்லா) இவ்விடத்தில் பட்டணம் உண்டாயிருந்ததாக நான் கேள்விப்படவில்லை. எங்கள் தகப்பன்மாரும் பாட்டன்மாரும்கூட கேள்விப்பட்டதாகச் சொல்லவுமில்லை என்று சொன்னான். அப்பால் நான் அந்தக் கடலைவிட்டு ஐந்நூறு வருடம் மறைந்திருந்துவிட்டு மீண்டும் அங்கேபோனேன். அப்போது அது பழையபடி பாரியபட்டணமாக இருந்ததென்று சொன்னார்கள். (சுபுஹானல்லா)

## ஹிக்காயத்து-9.

ஸாலிஹீன்களில் நின்று ஒருவரைத்தொட்டுப்பேசி வரப்படுகிறது: அவர்கள் சொன்னார்கள்: நான் ஹிஜாஸ் தேசத்துக் காட்டில் சிறிதுநாளாக யாதொன்றும் புசிக்காமல் சுற்றித்திரிந்தேன். அப்படி இருக்கையில் ஒருபோது எனக்கு ரொட்டியின்பேரிலும், சுடச்சுடவிருக்கும் மொச்சைக்கொட்டையின்பேரிலும் இஷ்டமுண்டாயிற்று. அப்போது 'இப்போது நாம் காட்டிலிருக்கிறோம்; நமக்கும் இறாக்கு தேசத்திற்கும் இடையில் வெகுதூரமிருக்கிறதே' என்று நான் நினைத்தேன். அவ்வாறு நினைத்து முடிவதற்குள் தூரத்திலிருந்து ஒருநாட்டு அறபி 'மொச்சைக்கொட்டை, ரொட்டி' யென்று சத்தமிட்டுக் கூறினார். அப்போது நான் அவரிடம்போய் உம்மிடத்தில் மொச்சைக்கொட்டை இருக்கிறதாவென்று கேட்டேன். அதற்கு அவர் ஆமென்று சொல்லி அவரின் ஆடையைவிரித்தார். அதில் மொச்சைக்கொட்டையும் ரொட்டியுமிருந்தன. அப்போது அவர் என்னைப்பார்த்து தின்னுமென்றார். நான் அதைத்தின்றேன். மறுபடியும் தின்னுமென்றார்; தின்றேன். மூன்றாவது தடவையும் தின்னுமென்றார்; தின்றேன்; நாலாவது தடவை நான் அவரைப்பார்த்

ஸிஸ்ஸலாமிடம் இவர் முருஸலான நபியா அல்லது முகர்றபான மலக்காவென்று கேட்டேன். அப்போது அவர்கள் சொன்னார்கள்: இவர் முருஸலான நபியுமல்ல, முகர்றபான மலக்குமல்ல; என்கிலும் இவர் உம்முடைய உம்மத்துகளில் நின்றும் எப்போதும் நாவு அல்லாஹ்வுடைய திக்ரைக்கொண்டு ஈரமாக இருந்த ஒருமனிதன் என்றார்கள்.

ஹிக்காயத்து-11.

இபுறாஹீம்ஹஜரி என்கிறவர்கள் நாற்காலியில் இருந்துகொண்டு குல்லயவ்மின் ஹுவபீஷானின் என்ற ஆயத்திற்கு மஃனா சொல்லிக்கொண்டிருக்கும்போது, அவர்கள் தலைக்குமேல் ஒருவர் நின்றுகொண்டு அவர்களை நோக்கி இப்போது உம்முடைய நாயன் என்னசெய்கிறான் என்று கேட்டார். அதற்கு அவர்கள் ஜவாபு சொல்லமுடியாமல் சஞ்சலமுள்ளவர்களாயிருந்தார்கள். அப்படி இருக்கும்போது அன்றிரவில் றசூல்சல்லல்லாகு அலைஹிவசல்லம் அவர்களைக் கனவில் அவர் தரிசித்து அவர்களிடத்தில் இச்சமாசாரத்தைக் குறித்துச் சொன்னார்கள். அதற்கு அவர்கள் சொன்னதாவது: உம்மிடம் வந்து சவால் கேட்டவர்கள் கிலுறு அலைகிஸ்ஸலாம். இன்னுமவர்கள் உம்மிடம் வருவார்கள்; வந்தால் நீர் அவர்களுக்கு இவ்வாறு ஜவாபு சொல்லும்: அல்லாகுத்தஆலா ஆதியில் அவனிருந்த இல்மின்படிக்கே எல்லாக்காரியாதிகளையும் நடத்திவருகிறதேயல்லாமல் அவன் புதிதாக வேறொன்றையும் அறிவாக்கவில்லை; ஆனால் அவனிப்போது சில ஜனங்களை உயர்த்துகிறான்; சிலர்களைத் தாழ்த்துகிறான் என்று சொல்லுமென்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்கள். மறுநாள் கிலுறு அலைகிஸ்ஸலாம், அவர்களிடம் வந்து அந்தசவாலை கேட்கவும், உடனே அவர்கள் றசூல்சல்லல்லாகு அலைஹிவஸல்லம் சொன்ன ஜவாபை சொன்னார்கள். கிலுறு அவர்கள் அவர்களை நோக்கி யார் உமக்கு இந்தஜவாபை படித்துக்கொடுத்தார்களோ அவர்கள் மேலில் நீர் சலவாத்து சொல்லுமென்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்கள். (ரலியல்லாகுஅன்கு)

ஹிக்காயத்து-12.

நாயகம் அபதுல் காதிருல் ஜீலானீ சொன்னார்கள்: நான் யாத்திரை செய்யும் காலத்தில் ஒரு மனிதர் என்னிடத்தில் வந்தார். அவரை அதற்குமுன் நான் கண்டதில்லை. அவர் எனக்குச் சொ[illegible]தாவது: உமக்கு என் சிநேகிதம் வேண்டுமா வென்றார். ஆம் [illegible]ன்று சொன்னேன். அவ்வாறு வேண்டுமாகில் நீர் என் [illegible]

சிறிதும் விகற்பம் செய்யக்கூடாதென்றார். அவ்வாறே நான் ஒப்புக்கொண்டேன். பின்பு அவர் என்னை நோக்கி நான் வருகிறவரையில் நீர் இந்த விடத்திலேயே இருமென்று சொல்லிவிட்டுப் போய்விட்டார். நான் ஒருவருடம் வரையில் அதே இடத்திலேயே இருந்தேன். பிறகு அவர் வந்து ஒருசாஅத்து நேரம் என்னுடன் உட்கார்ந்திருந்து எழுந்துபோகையில் என்னை நோக்கி நான் வருகிறமட்டும் இந்தத்தலத்திலேயே இரும்; வேறுஇடம் போகக்கூடாதென்று சொல்லிவிட்டுப் போய்விட்டார். பின்பு அவர் ஒருவருடம்வரையில் என்னைவிட்டுப் பிரிந்திருந்து, ஒரு சமயத்தில் ரொட்டியும் பாலும் கொண்டுவந்து வைத்துக்கொண்டு என்னை நோக்கி, நான்கிலுரு; உம்முடனிருந்து தின்னும்படி எனக்குக் கட்டளை கொடுக்கப்பட்டிருக்கிறதென்று சொல்லவும், நாங்கள் இருவரும் ஒன்றாய்க் கூடியிருந்து அவற்றைத் தின்றோம். அப்பால் அவர்கள், என்னை நோக்கி நீர் நம்முடன் பகுதாதுக்குப் பிரயாணப்படும் என்றார்கள். நான் அவர்களுடன் பகுதாதுக்கு வந்தேன் என்றார்கள். (ரலியல்லாஅன்கு)

## ஹிக்காயத்து-13.

ஷெய்கு அபீஸஊதில் ஹரீமீ றலியல்லாகுவைத் தொட்டு ரிவாயத்து வந்திருக்கிறது: நாயகம் முகியத்தீன் அப்துல்காதிறு ஜீலானீ றலியல்லாகு அன்கு சொல்லுகிறார்கள்: “நான் இராக்கு ராஜ்யத்தின் காட்டில் இருபத்தைந்துவருடம் யாத்திரை செய்துகொண்டிருந்தேன். அப்போது நான் ஜனங்களையும் ஜனங்கள் என்னையும் அறிந்ததில்லை. ஆகிலும் ரிஜாலுல் கைபென்னும் அவுலியாக்கள் என்னிடம் வந்துகொண்டிருப்பார்கள். அவர்களுக்கு நான் அல்லாகுத்தாலாவுடைய மேன்மையான மஃரிபாவென்னும் இல்முகளைக் கற்பித்துக்கொடுக்கிறவனாக இருந்தேன். எப்போது நான் இராக்குக்கு ஆரம்பமாக வந்தேனோ அப்போது என்னிடம் கிலுரு அலைகிஸ்ஸலாம் வந்தார்கள். அதுவரையிலும் நான் அவர்களை கிலுரு என்று அறிந்ததில்லை. பிறகு அவர்கள் என்னை நோக்கி, நான் உம்மை எந்த தலத்தில் உட்காரும்படி சொல்லுகின்றேனோ அங்குதான் நீர் இருக்க வேண்டுமென்று என்னிடத்தில் ஷர்த்து வாங்கி ஒரு இடத்தில் இருக்கும்படி சொல்லிவிட்டுப் போய்விட்டார்கள். நான் அதே இடத்தில் மூன்றுவருடம் இருந்தேன். அப்படி இருக்கையில் அவர்கள் ஒவ்வொருவருஷத்தில் என்னிடம்வந்து இன்னின்னவிடத்தில் உட்காருமென்று சொல்லிவிட்டுப் போகிறவர்களாக இருந்தார்கள். (ரலியல்லாகு அன்கு)

## ஹிக்காயத்து-14.

ஷெய்கு அபூ முகம்மத்காஸி மூப்னி உபைதுல்பஸரிய்யி றஹிமகுல்லாஹிடத்தில் ஒரு மனிதன் வந்து கிழுறு அலைஹிஸ்ஸலாம் ஹயாத்தாயிருக்கிறார்களா அல்லது மௌத்தாகி விட்டார்களாவென்று கேட்டபோது ஷெய்கு அவர்கள் சொன்னார்கள்: கிழுறு அலைஹிஸ்ஸலாம் ஹயாத்தாகத்தான் இருக்கிறார்கள்; நான் அவர்களிடம் முலாகாத்து செய்துவிட்டு அவர்களிடத்தில் உங்களுக்கும் அவுலியாக்களுக்குமிடையில் ஆச்சரியமான சமாச்சாரம் ஏதும்நடந்திருக்கிறதாவென்று கேட்டேன். அப்போது கிழுறு அலைஹிஸ்ஸலாம், 'நான் (பஹ்றுல்முஹீத்) என்னும் சமுத்திரக்கரையோரம் போயிருந்தேன். அங்கு மனிதர்களாலும் ஜின்களாலும் போகமுடியாது. இது நிற்க, அங்குஒருமனிதர்கம்பிளியைப் போட்டு மூடிக்கொண்டவராக நித்திரை செய்துகொண்டிருந்தார். அப்போது நான் அவரை இவர் அல்லாகுத்தஆலாவின் ஒலியாயிருக்குமென்று எண்ணி அவரையென்பாதத்தைக்கொண்டு தட்டி எழுப்பினேன். பிறகு அவர் விழித்து தாம் மூடியிருந்த கம்பளியைத் தலையைவிட்டு நீக்கி, என்னைநோக்கி 'ஆய்மனிதனே! என்னில் நின்றும் நீர் எதை நாடுகிறீர்' என்றார். அப்போது நான் அவருக்குச்சொன்னதென்னவெனில், நீர்தூக்கத்தை விட்டு அல்லாகுத்தஆலாவை இபாதத்துசெய்கிறதை நாடினேனென்றேன். அதற்கு அவர் நீர் என்னைவிட்டும்தூரப்போய்உமதுகபுசைக்கொண்டு பருக்காகுமென்று சொல்ல, நான் அவரைநோக்கி நீர் எழுந்திராமல் போனால் ஜனங்களிடத்தில்போய் இவர் அல்லாகுத்தஆலாவுடைய ஒலியாக இருக்குமென்று சொல்லிவிடுவேன் என்று சொல்லவும், அதற்கவர் நீரும் இவ்விடம் விட்டுப்போகவில்லையானால் நானும் ஜனங்களிடம்போய் இவர் கிழுரு என்று உம்மைக் காண்பித்துக்கொடுத்து விடுவேன் என்று சொன்னார். பின்னர் நான் அவரிடத்தில் நீர் என்னை எவ்வாறு அறிந்தீர் என்று கேட்டபோது அவர் என்னைநோக்கி, உண்மையாக நீர் அபுல் அப்பாஸ் கிழுரு என்று நான் அறிந்திருக்கிறேன். நான் யாரென்று சொல்லுமென்றார். அப்போது நான் அல்லாகுத்தாலாவிடத்தில் முனாஜாத்து செய்து, 'நாயனே! நான் அவுலியாக்களுக்கெல்லாம் தலைவனாக இருக்க, இந்த மனிதருடைய சமாச்சாரம் யாதொன்றும் எனக்குத் தெரியவில்லையே' யென்று சொன்னபோது, நோக்கிய

மன்றி ஒரு சப்தம் வந்தது; அதாவது: 'ஆய் அபுல்அப்பாஸே! நீர் அவருக்கும் தலைவர்தான். இவரும் நமது ஹபீபுகளில் சார்ந்தவர். நாமிவரை முஹப்பத் வைத்திருக்கிறோம்' என்பதே. இந்த சத்தம் வரவும் அவர் என்னைப்பார்த்து 'ஆய் அபுல் அப்பாஸே! நீர் அல்லாகுத்தாலாவிடத்தில் நமது நடபாகீத்தைக் கேட்டீரோ' வென்று கேட்க, நான் ஆமென்று சொன்னேன். பின்பு நான் அவரில் நின்று துஆசெய்வதை நாடினேன். அவர் என்னில நின்று துஆ செய்வதை நாடினர். அப்போது நான் அவரைநோக்கி, நீர்தான் எனக்காக வேண்டி துவாசெய்வது அகத்தியமாக இருக்குமென்று சொல்ல, அவர் என்னைநோக்கி நீர்போம்; அல்லாகுத்தாலா உம்முடைய நன்மை நிரப்பமாக்கி வைப்பானென்றார். நான் அவரில் நின்று மறுபடியும் அதிகமாகிய துவாவை நாடவும் அப்போது அவர் என்னைவிட்டு மறைவாகிவிட்டார். பிறகு நான் அவ்விடத்தில் நின்று கொஞ்சதூரம் போகவும் அங்கு பிரமாண்டமான மணல்மேடு ஒன்று தோன்றியது. அது வானத்தை முட்டினது போலிருந்தது. அதில் ஏறிப்பார்க்கலாமென்று எனது மனது நாடியது. அப்பால் நான் அதில் ஏறி நடந்துபோகவும் அங்கு ஒளியொன்று பிரகாசிக்கிறதைக் கண்டேன். அவ்வொளியைக் கண்ணுற்றுப் பார்க்கக்கூடவில்லை. அப்பால் நான் அந்த ஒளிவு எவ்விடத்தில் நின்று தான் வருகிறது என்று தெண்டித்து கூர்க்கப்பார்க்கையில் அங்கு திடமென்று ஒரு பெண்பிள்ளை கம்பளியைக் கொண்டு போர்த்தினவளாய் நித்திரை செய்தாள். அவளுடைய கம்பளியைப் பார்த்தால் நான் முன்கண்ட மனிதருடைய கம்பிளிக்கு ஒற்றுமையாய் இருந்தது. பின்பு நான் அப்பெண்பிள்ளையை எழுப்பலாமென்று இருக்கையில் சோத்திரமன்றி ஒரு சப்தம் வந்தது; அதாவது: 'ஆய் கிழுரே! அகபு செய்யும். ஏனெனில் நாம் அவளை முஹப்பத் வைத்திருக்கிறோம்' என்பதே. இந்த சத்தம்வரவும் நான் அவள் விழிப்பதை எதிர்பார்த்திருந்தேன். அவள் சுபுஹுதொழுகையின் துவக்கத்தில்விழித்தாள் அப்படி விழித்தபோது எல்லாப்புகழும் புகழ்ச்சியும் ஒரு நாயனுக்கே; அவன் என்னைச சிநேகத்துக்குப்பின்னால் விழிப்பாக்கிவைத்து தன்னளவில் என்னுடைய கல்பை ஆசையாக்கி வைத்தான். இன்னும் எல்லாத் துதியும் அவனுக்கே. அவன் என்னை தன்னோடு மருகுதலாக்கிவைத்து அவனின் அடியார்களை என்னைவிட்டுவிலக்கமாக்கிவைத்தானே அந்

நாயனுக்கே புகழும் துதியும் என்று சொல்லிவிட்டு என்னை நோக்கி, (மர்ஹபன்பிகயா அபல் அப்பாஸ்) என்னி அபுல் அப்பாஸே! உமக்கே சுபசோபனம்; ஆனால் நீர் விலக்கப்படு முன்பதாகவே அதபாக இருந்திரானால் மெத்த நல்லதாக இருந்திருக்கும் என்றாள். நான் அவளிடத்தில் அல்லாகு தஆலாவைக்கொண்டு சத்தியஞ்செய்து நான் முன்கண்ட மனிதருடைய மனைவியல்லவாவெனக் கேட்க, அவள் ஆமென்று சொல்லிவிட்டு என்னை நோக்கி இந்தக் காட்டில் அப்தாலுகளில் நின்றுமுள்ள ஒருபெண்பிள்ளை வபாத்தானாள். அவளைக் குளிப்பாட்டி கபன் முதலானவை செய்கிறதற்காகவேண்டி அல்லாகுதஆலா இவரை என்னை அனுப்பினான். எப்போது நான் அவளைக் குளிப்பாட்டி கபனிட்டு பார்க்கொழித்தேனே அப்போது அவளின் மய்யித்தை எனக்கு முன்பாகவே வானத்தளவில் உயர்த்தப்பட்டுக் கொண்டுபோகவும் அது என் பார்வையைவிட்டு மறைவாகிவிட்டதென்று சொல்லிமுடித்தாள். பிறகு நான் அவளில்நின்று துவாசெய்வதை நாடவும் அவள் என்னில் நின்றும் துவாவை நாடினாள். அப்போதுநான் அவளிடத்தில் நீதான் எனக்காகவேண்டி துவாசெய்வது முக்கியமாக இருக்குமென்றேன். அதற்கு அவள் அல்லாகு தஆலா உமதின் நசீபை நிரப்பமாக்கி வைப்பான் என்று சொன்னாள். பிறகு நான் அவளிடத்தில் நின்று அதிகமான துவாவை நாடினேன். அப்போது அவள் என்னை நோக்கி, நீர் என்னைச் சடைவாக்காதீர்; அவ்வாறு சடைவாக்குவீராகில் நான் உம்மைவிட்டு மறைவாகிவிடுவேன் என்று சொல்லிவிட்டு மறைவாகி விட்டாள்." என்று சொன்னார்கள்.

பின்னும் ஷெய்கு அபூமுகம்மது றஹிமகுல்லாஹு சொல்லுகிறதாவது: நான் கிலுரு அலைகிஸ்ஸலாமிடத்தில் இந்த அப்தாபுகள் கூட்டத்தில் யாதொரு பர்தானவர்கள் இருக்கிறார்களாவென கேட்கவும் அவர்கள் ஆமென்று சொன்னார்கள். அப்போது நான் அவர்களிடம் நமது காலத்தில் பர்தானவர்கள் யாராக இருக்குமென்று கேட்டேன். அதற்கு அவர்கள் இந்தகாலத்தில் பர்தானவர்கள் நாயகம் குதுபுல் அக்தாப் முஹிய்யத்தீன் அப்துல்காதிறுஜைலானி றலியல்லாகு அன்குவாக இருக்குமென்றுசொல்லவும், அவர்களிடத்தில் நான் அவர்களின் நடபாகத்தைக் குறித்து ஏதேனும் எனக்குச் சொல்லுங்கள் என்றேன். அப்போது அவர்கள், இந்நேரத்தில் ஷெய்கு அப்துல் காதிறு றலியல்லாகு அன்குவாகிறவர்கள் அப்தாபுக் கூட்டத்திற்கெல்லாம் பர்தானவர்கள்; அக்தாபுகளுக்கு குத்புமானவர்

கள்; அல்லாகுதஆலா அவர்களுக்குக் கொடுத்திருக்கிறபதவியைவிட மேலான பதவி எந்த ஒலிமார்களுக்கும் கொடுக்கவே இல்லை. இன்னும் அவன், முஹப்பத்தென்னும் குடிப்பை, அந்த ஹபீபுகளுக்கு குடிப்பாட்டியதைவிட மேலானதை அவர்களுக்கு குடிப்பாட்டுகிறான். இனி அல்லாகுத் தஆலா தனக்கும் அவர்களுக்குமிடையில் அவனுடைய இரகசியங்களில் நின்றும் சிலஇரகசியங்களை அமானம் வைத்திருக்கிறான். இக்காரணத்தினாலேயே அவர்கள், மற்றும் அவுலியாக்களைவிட ஷப்கத்தென்னும் முந்துதலைக்கொண்டு முந்திவிட்டார்கள். இன்னும் எந்த ஒலிமார்களும் கியாமநாள் பரியந்தம் வருகிற அவுலியாக்களும் அவர்களிடத்தில் தலைசாய்த்து அடிபணிந்து அதபுச்செய்து அவர்களிடமே இல்முகளைப்படித்து வருகிறார்களென்று கிஹுரு அலைகிஸ்ஸலாம் சொன்னார்கள். என்பதே. (றலியல்லாகு அன்கு)

ஹிக்காயத்து-15.

ஷெய்கு அபூமத்யனில் மக்ரிபி றகிமகுல்லாகு சொல்லுகிறார்கள்: "நான் மூன்று வருடத்துக்குமுன்னால் அபுல் அப்பாஸ் கிஹுரு அலைகிஸ்ஸலாமில் நின்று முலாகாத்துச்செய்து பிறகுநான் அவர்களிடம் மஷ்ரிகு தொடுத்து மக்ரிபுவரையிலுமுள்ள மஷாயிகுமார்களுடைய அஃவால்களைப்பற்றியும் நாயகம் ஷெய்கு அப்துல்காதிறு ஜீலானி கத்தஸல்லாகு ஸிர்றகு அவர்களைப்பற்றியும் கேட்டபோது அவர்கள், என்னைநோக்கி, 'ஆப் அபுல் மத்யனே! நாயகம் ஷெய்கு அப்துல் காதிறு ஜீலானி றலியல்லாகு அன்குவாகிறவர்கள் ஸித்தீகீன்களுக்கு இமாமானவர்கள்; ஆரிபீன்களுக்கு ஹுஜ்ஜத்தானவர்கள்; மக்ரிபாவென்னும் மெய்ஞான இல்முக்குருவானவர்கள்; அவர்களின் காரியம் அவுலியாக்களுக்கிடையில் மெத்த வனுப்பமானது. இன்னும் அவர்கள் பதவியானது ஜலம் விரைவாக ஓடும்படியான ஆற்றைப்போல் மிகமேலானது. இனி மற்ற அவுலியாக்களுடைய பதவிகளானது அவர்களின் பதவிகளுக்கு தாழ்ந்ததாக இருக்கும்; நானும் அவர்களுடைய இஷாராவைகொண்டுதான் அவுலியாக்களுக்கிடையில் அதிகாரத்தை நடத்திவருகிறேன் என்றார்கள். பின்னும் ஷெய்கு அபூமதயனில் மக்ரிபீ றகிமகுல்லாகு சொல்லுகிறது என்னவெனில், கிஹுரு அலைகிஸ்ஸலாம் எந்த ஒலிமார்களுடைய ஹக்கிலும் நாயகம் ஷெய்கு அப்துல்காதிரு ஜீலானி றலியல்லாகு அன்குவின் ஹக்கில் புகழ்ச்சி செய்ததுபோல் ஒருவரையும் புகழ்ச்சிசெய்ய

நான் அவர்களினின்று கேட்கவில்லையென்று சொன்னார்கள். (றலியல்லாகு அன்கு)

## ஹிக்காயத்து-16.

ஷைகு உஸ்மான் ஊகிமகுல்லாகு சொல்லுகிறார்கள்: "நான் காமிலான ஷைகைக் காணுதற்காகவேண்டி எங்கே போகிறதென்று எனக்கு ஒரு சமாச்சாரமும் தெரியாமலிருக்கும்போது திடீரென்று ஒரு அழகான மனிதர் என்னிடம் வந்து 'அஸ்ஸலாமு அலைக்க யா உஸ்மான்' என்று ஸலாம் சொன்னார். நான் மறுமொழி சொல்லிவிட்டு அவரிடத்தில் சத்தியஞ்செய்து, 'நான் உம்மை இதற்குமுன் ஒருபோதும் காணவில்லை; அவ்வாறு இருக்க எவ்வாறு என்பெயர் உமக்கு தெரியவந்தது? நீர் யாராக இருக்கும் என்று கேட்க, அவர் நான் கிலுரு; இந்நேரத்தில் நான் ஷைகு அப்துல்காதிறு ஜீலானீ றலியல்லாகு அன்குவிடத்தில் ஹாஜிறாகியிருந்தேன்; அவர்கள் என்னிடம் ஆப்அபுல்ல அப்பாஸே! நேற்றிரவு ஸரீபன் என்ற ஊரிலுள்ள உஸ்மானு என்னும் பெயருடையவருக்கு அல்லாவில் நின்று ஜதுபு வெளியாகி இருக்கிறதினால் அவரை எதிர்சென்றழைக்கும்படி நான் ஏவப்பட்டிருக்கிறேன்; இன்னும் ஏழுவானத்திற்கு மேலே நின்றும் அவரைப்பற்றி (மற்றவன் பிசஅத்தீ) எம்னீ ஆப் எனது அடிமையே! உமக்கே சுபசோபனம்' என்னும் சத்தம் வந்தது; அவர் அல்லாகுத்தாலாவினிடத்தில் யாதொரு காமிலான ஷைகைக்கொண்டு நேர்வழி காட்டும்படி வரம் கேட்டிருக்கிறார்; ஆனதால் கிலுரே நீங்கள் போங்கள்; இடைவழியில் அவரைப் பெற்றுக்கொள்வீர்கள்; அவரை என்னிடம் கூட்டிக்கொண்டு வாருங்கள்' என்று சொன்னார்கள்; ஆதலால் உஸ்மானே ஷைகு அப்துல்காதிரு ஜீலானீ றலியல்லாகு அன்கு ஆகிறவர்கள் ஆரிபீன்களுக்கு பர் தானவர்கள்; இக்காலத்திலிருக்கப்பட்டவர்களுக்கு கிபுலாவானவர்கள்; ஆனதினால் நீர் அவர்களுடைய கிலேனிதத்தைத் தெரிந்து அவர்களுக்கு மரியாதை செய்யும்' என்றார்கள். அப்போதே என் உணர்வு நீங்கி ஹாஜர் வந்ததின் பிறகு பார்க்க கிலுரு அலைஹிஸ்ஸலாம் என் கண்ணைவிட்டு மறைவாகி விட்டார்கள். நான் பகுதாதில் வந்திருக்கிறேன். பின்பு நான் ஏழுவருடம் வரையில் அவர்களைப் பார்க்கவில்லை" யென்று சொன்னார்கள்.

